# பறம்பு நாடும் பாரி மகளிரும்



ஆக்கியோர் :

பண்டிதை S. கிருஷ்ணவேணியம்மாள்

*Senior Tamil Pandit,*

*Lady Willingdon Training College, Madras.*



பிரசுர கர்த்தர்:

கே. பழனியாண்டிப் பிள்ளை கம்பெனி,

சென்னை

1936



[விலை அணா 10

ஸ்ரீ:

# முன்னுரை



இச்சீரிய நூல், புலமையிலும், ஆராய்ச்சியிலும், தூய ஒழுக்கத்திலும் உயர் நிலை பெற்ற சகோதரியர் இருவரைத் தலைவியராகக் கொண்டு ஒளிர்கின்றது.

பாரியாரையும், அவர் வள்ளற்றன்மையையும் அறியாதார் ஒருவருமிலர். அவரைப்பற்றி எழுந்த நூல்களும் பலப்பல. ஆனால், அவர்தம் அருமை மகளிரின் சீர்மைகளை வரன்முறையாக எடுத்து இயம்பும் தனி நூல் ஒன்று இது காறும் வெளி வந்திலது. புறநானூறு, அவ்வையாரின் தனிப் பாடல்கள் முதலியவற்றால் அம்மங்கையரின் வாழ்க்கை நுட்பங்கள் சில புலனாகின்றன.

பாரியார், கபிலர், கல்வி முதலியன தத்தமக்குள்ள மதிப்பைக்காட்டிலும் பெருமதிப்புப் பெற்றுத் துலங்கியதற்குக் காரணம் இம்மகளிர்தம் பெருந்தன்மையே என்பது இந்நூலை ஊன்றி நோக்குவார்க்குப் புலனாகாமல் இராது.

இச்சகோதரிகள் ஒற்றுமையும், பொருள்களை நுணுகி நோக்கும் புத்திக் கூர்மையும், அவற்றைத் தங்கள் மனத்துலையில் வைத்து அளந்து

அளந்து பார்க்கும் பண்பும், இறுதியில் வரை யறுத்து ஒரு முடிவிற்கு வரும் நேர்மையும், இவர் கள் இயற்கையில் படிந்து படிந்து துய்க்கும் இன்ப மும், வீழ்நாள் படாமல் அறிவுத் துறையிலேயே தங்கள் காலத்தைக் கடத்தும் கண்ணியமும், துன்ப காலத்திலும், இன்ப காலத்திலும் அடையும் உணர்ச்சிகளும், அவ்வவ்வமயங்களில் இவர்கள் மேற்கொள்ளும் மனத் திட்பங்களும் கற்றோர் மனத்திற்கும் செவிக்கும் விருந்தளிக்கும். இவை நூலின் அகத்தில் ஆங்காங்கே எடுத்தியம்பப்பட் டுள்ளன.

இத்துணைப் புலமைச் செல்வியர் பல்லோர் தம் சீர்மையினால் நம் தமிழ்த் தாயின் குடலை விளக் கஞ் செய்து, தமிழ் நாட்டையும் அணி செய்தனர் என்பது சான்றோர் அறியாததன்று. அவருள் சிலரைப்பற்றியேனும் என் புல்லறிவிற்கெட்டிய வாறு எடுத்தியம்பி இன்புற வேண்டுமென்னும் ஆர்வமே என்னை இந்தத் தொண்டில் நுழையச் செய்தது.

பழைய காலத்துப் பெற்றோர், பெண்களை அறிவுடையவர்களாய் இலங்கச் செய்த முறையை யும், பெண்கள் வாழ்க்கையில் அப்பெற்றோர்க்கு இருந்த பொறுப்பையும், அதனால் அம்மகளிர் அடைந்த பெருமையையும் இந்நூல் தெள்ளிதின் புலப்படுத்துகின்றது.

'பிறருக்கு நன்மை புரிதலாகிய தேசத் தொண்டில் கபிலர், அவ்வையார் முதலிய நம் தமிழ் நாட்டுப் பெரியோர் எத்துணைப் பொறுப்பை மேற்கொண்டிருந்தனர்? அதனால் அடைந்த பயன் யாது?' என்பன இந்நூலால் நன்கு விளங்கும்.

அம்மகளிர் தோன்றிய பறம்பு நாடு சிறிதே ஆயினும், அதன் வளம், அரண், அழகு, அமைப்பு முதலியன கண்டோர் மனத்தைக் கவர்ந்தன. அஃதொரு பெரிய தேசத்தை ஒத்து விளங்கிற்று. பாரிமகளிர்க்கு இயற்கையிலுள்ள இன்னலத்தைப் பேசப் புகுங்கால், அச்சிறு நாட்டின் சீர்மையே நம் மனக்கண்முன் காட்சி அளிக்கும். அதனாற்றான் இச்சிறு நூலிற்குப் "பறம்பு நாடும் பாரி மகளிரும்" எனும் பெயரமைக்கப்பட்டது.

கல்வியிலும், அறிவிலும் குறைவுடையேன் வெளியிட்ட இந்நூலின்கண் மலிந்து கிடக்கும் பிழைகளைச் சான்றோர் திருத்திப் பொருள் கொள்ளு மாறு யான் மிக்க பணிவுடன் கேட்டுக்கொள்ளு கிறேன்.

தோன்றாத் துணையாய் நின்று அடியாளுக்கு எப்போதும் அருள் புரிந்து வரும் எம்பெருமானுக் கும், அறிவு கொளுத்திய ஆசிரியர்களுக்கும் என் வணக்கத்தைச் செலுத்தக் கடமைப்பட்டுள்ளேன்.

**S. கிருஷ்ணவேணி.**

# பொருளடக்கம்



பொருள் பக்கம்

# பறம்பு நாடும் பாரி மகளிரும்



## 1. பறம்பு நாட்டின் சிறப்பு

செந்தமிழ்ச் செல்வமும், வள்ளற்றன்மையும் மிகுந்து மிளிர்ந்த தமிழ் நாட்டின்கண் பண்டு **வேளிர்** என்ற ஒரு வகுப்பினர் இருந்தனர். அவ்வகுப்பினருக்குச் சேர சோழ பாண்டியரைப் போன்றே சீருஞ் சிறப்பும் மிக்கி ருந்தன. அந்நாட்டில் அவர்கள் பெரும்புகழ் பெற்றிலங் கியதற்குக் காரணம் அவர்கள் வள்ளற்றன்மையே யாகும்.

> "ஈத லிசைபட வாழ்த லதுவல்ல(து)
> ஊதிய மில்லை உயிர்க்கு." —திருக்குறள்

இவ்வீகைக் குணம் அவர்களுக்கு இயற்கையாகவே அமைந்திருந்தது. தயையும், ஈகையும் பிறவிக் குணங்கள் அல்லவா! அன்றியும், அவர்களில் பல்லோர் தமிழ்ப் புலமையினும் தலைமையுற்று விளங்கினர். இவ்வகுப் பினரில் வள்ளற்றன்மையையே வடிவெனக் கொண்டு திகழ்ந்தவர் ஓரி, மலையன், எழினி, பேகன், ஆய், நள்ளி, **பாரி** என்னும் எழுவராவர். இவர்களைக் கடையெழு வள்

ளல்கள் என நூல்கள் கூறுகிற்கும். இங்ஙனமே அவ்வக் காலங்களில் பல பேர் தோன்றி, நம் நாட்டைப் புலமை யானும், ஈகையானும் அலங்கரித்தனர். அவ்வணிதான் நம் தமிழ்த்தாயை இன்னும் மிளிரச் செய்துகொண்டிருக் கின்றது. இச்சிறப்பு இன்றேல், பல துன்பங்களிலும் உழன்றுகொண்டிருக்கும் நம் தமிழணங்கு என்றோ சீர்மை குலைந்து விழுந்திருப்பள்.

அவ்வெழுவரில் பாரியார் என்பவர் வள்ளற்றன்மை யில் முதன்மை பெற்று விளங்கினர். அவர் ஏறக்குறைய 1700 ஆண்டுகட்கு முன்னர் இருந்தவர் என்பது சிலர் கொள்கை. தமிழ் மணங் கமழும் பாண்டிய நாட்டைச் சார்ந்த பறம்பு நாடே அவருக்கு உரித்தானது. ஆங் கமைந்த செழித்த நிலங்களும், பூஞ்சோலைகளும், தாம ரைத் தடாகங்களும் அந்நாட்டைப் பெரிதும் அழகு படுத்தின. இலவசமாக உணவூட்டும் மடங்கள் பல, மக்கள் பசி நோயை ஆற்றின. பசி நோய் ஒழிந்ததால் உடல் நோய் அவர்களிடம் தலை காட்டிலது. நாடு மிக்க ஊக்கத்தையும், பொறுமையையும், நீதியையும் பூண்டு இருந்தது. எங்குச் செல்லினும் புற்றரை பச்சைப் பசே லென்று காண்போர் கண்களைக் கவர்ந்தது. அது கன்றீன்ற பசுக்களுக்குப் பெருவிருந்தளித்தது. குடிகள் குறைவின்றி வாழ விளை பொருள்கள் பலவும் ஆங்கு உண்டாயின. அவர்களுக்கு நிலமே நிதிப் பேழையாய் இருந்தது. பயன் தரும் தருக்கள் பல, மக்கள் முயற்சி இன்றியே ஓங்கி வளர்ந்திருந்தன. தந்நலம் பாராது பிறருக்கே நிழலையும், காய் கனிகளையும் தந்துதவும் மரங்கள் சாலையின் இரு மருங்கும் தழைத்து ஓங்கி

இருந்தன. சூரியன் கொடுமையைப் போக்கி, நிலவுக் காலத்தில் வழி நடத்தல் போன்று அவை மக்களுக்கு இன்பத்தையூட்டின; செல்பவருக்கு நிழலை மாத்திரமன்றி இனிய உணவையும் ஈந்தன. அருகிலிருந்த தெளிந்த நீர் நிலைகள் அருந்தத் தூய நீரை உதவின. வழி நடப்போர் கொண்டு போந்த தோட் கோப்புப் பயனற்றது. பல நாட்டினரும் கலந்து செல்லுங்கால் அவரவர் நாட்டின் வளங்களையும் மேன்மைகளையும் இன்பந் தோன்றப் பேசிச் சென்றனர். இதனால் ஒரு நாட்டார் இன்னொரு நாட்டினர் இயல்புகளை அறிதற்கும், ஒருவரோடொருவர் நட்புப் பாராட்டுதற்கும் இடமேற்பட்டது. பந்தலிடப்பட்டது எனத் தோன்றும் மரங்களின் பிணைப்பும், தளிர்களின் அழகும், இலைகளின் பசுமையும், மலர்களின் பல வகை நிறங்களும், வீசும் குளிர் காற்றும் நடப்பதற்கு அவர்களை ஊக்கப்படுத்தின. சுரை படர்ந்த இடத்திலுள்ள இலைகளின் குவியலின்மீது செங்கழுநீரன்ன கண்களையும் இனிய முறுவலையுமுடைய மகளிர் நின்று, உமணர் செலுத்தும் உப்பு வண்டிகளை எண்ணினர். உடுக்கள் தங்கள் நிலை மாறிச் செல்லல் நாட்டின் பஞ்சத்திற்கு அறிகுறி என உலகம் உரைக்கும். அங்ஙனம் ஏகினும், பாரியாரின் செங்கோன்மை நலத்தால் பறம்பு நாடு செழிப்பிற் குறைந்திலது. மழை வளங் குறையினும், அருவிகள் பரந்து நிலத்திடை ஓயாது பாய்ந்துகொண்டே இருந்தன.

## 2. பறம்பு மலைச் சிறப்பு

இன்னும் பற்பல இயற்கை வனப்புகள் வாய்க்கப்பெற்று அந்நாடு, புலவர்களுக்குப் பெருவிருந்தளித்தது. அப் பறம்பு நாட்டில் முந்நூறு ஊர்கள் உண்டு. பறம்பு என்னும் மலையும் அவணிருந்தது. அம்மலைபடு பொருளே அந்நாட்டை வளமுறச் செய்தது என்றல் மிகையாகாது. அம்மலைச் சாரலில் அருவிகள் இடையறாது குதித்தோடிக் கொண்டிருந்தன. அம்மலைச் சாரலிலுள்ள குறத்தியர் சந்தனத் துண்டங்களையே எரி கரும்புகளெனப் பயன் படுத்துவர். ஆதலின், அவர்கள் அட்ட சோறும் கறியும் சந்தன மணம் வீசும். அவண் மூங்கில் நெல், இனிய சுளை களையுடைய பலாப்பழம், செழித்த வள்ளிக் கிழங்கு, முதலிய மிகுந்திருந்தன. மலரும், மணமும், காயும், கனியும், பறவையும், பார்ப்பும், கொடியும், செடியும், இலையும், தழையும், குன்றும், மலையும், நதியும், ஆறும், தானமும், தருமமுமே அங்கு நிறைந்திருந்தன. முனி வரும் யோகியரும் தனித்திருந்து இறைவனை இறைஞ்ச அப்பறம்பு மலை மிக்க வசதியாய் இருந்தது. சான்றோர் பலர் அவண் வதிந்தனர். புலவரும் மற்றையோரும் தாம் தாம் கற்ற நூல்களைத் தனித்திருந்து ஆராய்தற்குப் பொருத்தமான ஒதுக்கிடங்கள் பல அவணிருந்தன. ஆசிரியரிடம் சிறுவர் அமர்ந்திருந்து நூல் பயிலுதற்கும், கற்றவர் ஒருவரையொருவர் வினவி ஐயந்தெளிதற்கும், வாதமிடற்கும், வெற்றி பெற்றவர் பரிசுகளேற்றற்கும், அப்போதைக்கப்போது யாவருமறிய மன்னன் அரசு வீற்றிருத்தற்கும் தக்க மண்டபங்கள் பல ஆங்காங்குத் திகழ்ந்தன.

## 3. மலர் வனம்

மகளிர் விளையாடற்கென அழகிய சோலை ஒன்று ஆங்கிருந்தது. நீராடும் ஓடைகளும் உணவருந்தும் மண்டபமும், இளைப்பாறும் மணற்றிட்டைகளும் அவண் உண்டு. நாடோறும் மாலையில் இளம்பெண்டிர் பலர் அச்சோலைக்குப் போந்து குழுமுவர். அவர்களிற் சிலர் அழகிய பதுமைகளுக்கு மணஞ் செய்து மகிழ்வர். கந்துகம் எறிந்தாடுவதில் சிலர் காலம் கழியும். ஓடிப் பிடிப்பதில் சிலர் மனஞ் செல்லும். கும்மி கொட்டிக் கோலடித்து நேரம் போக்கும் ஒரு கூட்டம். மனங் கலந்த உயிர் நட்பினர் இருவர் ஒரு புறம் தனித்திருந்து பேசிக்கொண்டிருப்பர். கல்வியில் இன்பமும் தேர்ச்சியுமுடைய கூட்டம் ஒன்று, தான் கற்ற நுண்ணிய பொருள்களை ஆராய்ச்சி செய்தலில் போது போக்கும். சிலர் இசை கூட்டி இனிய குரலுடன் பாடிக்கொண்டிருப்பர்.

பறவைகளும், பார்ப்புகளும் கத்துவதைப் போன்றே தாமும் கத்திக் காட்டுவர் சிலர். வண்டுகளின் மிழற்றலைச் சிலர் தம் குரலினுற் கூட்டுவர். 'நீ கத்தலும் மிழற்றலும் சரியல்ல; யான் அவற்றைப் போன்றே செய்வேன்,' என இரண்டொருவர் உரக்கக் கூவுவர். இதில் சிறு சண்டை ஏற்படும். 'வாவா மயிலே, வந்து விளையாடுவாய். இரு இரு குயிலே, இனிது பாடுவாய். கூ கூ கிளியே, கொஞ்சிப் பேசுவாய்,' என இசைக்கும் ஒலி எங்கும் கேட்கும். மானின் கண்ணழகில் மயங்கியும், அன்ன நடையில் ஆழ்ந்தும் நிற்பவர் சிலர். அழகிய மான்களைத் துரத்திச் செல்வதால் சிலருக்கு இளைப்புண்டாகும். மான் குட்டிக

ளுடன் விளையாடிக்கொண்டிருக்கும் ஒரு கூட்டம். மலர் பறித்தல், அழகுபடத் தொடுத்தல், ஒருவருக்கொருவர் சூட்டுதல் ஆகிய தொழில்கள் ஆங்காங்கு நிகழ்ந்துகொண் டிருக்கும்.

ஒருத்தியை அணி செய்து அரசியென மணற்றிட் டையிலிருத்தி, அமைச்சரையும் கூட்டி, ஒரு சபை சேர்ப்பர் சிலர். ஆங்குச் சிற்றரசர் பலர் கப்பங் கட்ட வருதல் போன்றும் வேறு சிலர் வழக்குகளைக் கொண்டு வருதல் போன்றும் நடிப்பர். அவ்வழக்குகளை அரசி அமைச்சருடன் கலந்து ஆய்ந்து நீதி வழங்குவள். இத் தன்மையான விளையாட்டுகள் பல ஆங்கு நடைபெறும். நீர் நிலைகளில் இறங்கி நீராடும் மகளிர் ஒருவர்மீதொருவர் நீரை வாரி இறைத்துக்கொள்வர். சிறிது தூரம் நீந்திச் செல்ல அவர் மனம் விழையும். இதில் வெற்றி பெற்றவர் பரிசு பெறுவர் என்ற ஒரு கோட்பாடும் உண்டு. அங் ஙனமே அழகிய பூங்கொத்துகளும், மயிற்றோகைகளும் வெற்றியடைந்தவர்களுக்கு அளிக்கப்படும். அப்போது உண்டாகும் கை கொட்டலும் பேரொலியும் அச்சோலை யையே அசைப்பது போலிருக்கும். ஒருவர் சேலையை மற் றொருவர் எடுத்து ஒளித்துவிட்டு, அவரை அலக்கழிப்பர். இடையிடையே கனி தரும் மரங்கள் சிலவும் காணப்படும். சுகங்களும், அணில்களும் கடித்து வீழ்த்திய பழங்கள் தருக்களினடியிற் சிதறிக் கிடக்கும். அக்கனிகளைச் சிலர் சுவைப்பர். மரங்களில் கட்டப்பட்ட தேன் கூடுகளும் சில மகளிருக்கு விருந்தளிக்கும்.

தம் பாட்டிமார் செப்பிய விளையாட்டுக் கதைகளை ஒருவருக்கொருவர் சொல்லி நகையாடிக்கொண்டிருப்பர்

ஒரு கூட்டத்தார். பின்னுதல் தைத்தல் முதலிய கைவேலே களேச் சிலர் செய்துகொண்டிருப்பர். சித்திரமெழுது வதில் வல்ல பெண்டிர் சிலர், நிறங் கலந்த தட்டுகளேயும், சித்திரந்தீட்டும் கருவிகளேயும், அத்தொழிற்கு வேண்டிய மற்றும் பல பொருள்களேயும் வைத்துக்கொண்டு அச் சோலேகளிலுள்ள அழகிய தோற்றங்களே வரைவர். மணல் திட்டையில் உட்கார்ந்திருக்கும் பெண்ணின் உருவைத் தீட்ட ஒருத்தி மனஞ் செல்லும். அவள் அங்ஙனமே அவள் உருவத்தை அழகுபடத் தீட்டித் தன் தோழியருக் குக் காட்டிக்காட்டி இன்புறுவள். அதிலுற்ற சிற்சில குறைகளேச் சிலர் எடுத்துச் சொல்லிச் சொல்லி அவளேப் பரிகசிப்பர். அப்போது அவளும் அவர்களுடன் கலந்து நகுவள். சிலர் மனம் அவணுள்ள இயற்கையழகுகளில் செல்லும். அவ்வியல்புகளேக் கூர்ந்து கூர்ந்து நோக்கு வதிலேயே அவர்கள் கருத்து முழுதும் ஊன்றிவிடும். பொழுது சாய்வதும் அவர்களுக்குப் புலனுவதில்லே.

புலமை வாய்ந்த ஒருத்தி அவ்வியற்கை வனப்பைச் சிறப்பித்துக் கவி பாடுவள். அக்கவி, இயற்கை இயல்புகள் பலவற்றை ஆடியெனத் தெளித்துக் காட்டும். அதைப் படித்துப் படித்து ஆநந்தமுறும் ஒரு கூட்டத்தார், அவ் வியற்கையிலிருந்து இறையிடம் மனத்தைச் செலுத்துவர். அம்முறையில் இறை அருளும் அன்பும் அவர்களுக் குத் தோன்றும். அன்ஞர் அவன் கருணேத் திறத்தைப் பேசிப் பேசி மனங் கசிவர். உடனே அன்பால் அகமுருகி ஒன்றுங் கூற நாவெழாது சிறிது நேரங் கழியும். பின்பு பொழுது பட்டதை உணர்ந்த ஒவ்வொரு கூட்டமும் தத்தம் வீடு திரும்பும். அச்சோலே விசாலமும் வனப்பும்

வாய்ந்திருந்ததனால், அஃது இளம்பெண்டிர் அச்சமும் துன்பமுமின்றி மகிழ்ந்துறையப் பொருத்தமாயிருந்தது.

அந்நாட்டில் வதிந்த மகளிர் மாலைப் பொழுதை மிக்க ஆவலுடன் எதிர் நோக்கி நிற்பர். தமக்கு இன்பத்தை ஊட்டும் செயலைப் புரிதற்கும், நட்பினரோடு கூடிக் குலவுதற்கும் அஃதே அவர்களுக்குத் தக்க நேரம். முழுமதிக் காலமாயின், இன்னும் சிறிது நேரம் அவண் நீட்டித்திருந்து இன்பந் துய்ப்பர். வீட்டு வேலைகளைச் சீர்மையுடன் இயற்றல், உடல் நலத்தைப் பேணல், அறிவை மேன்மேலும் வளர்க்க முயலுதல், தத்தமக்கு உரிய பொறுப்புகளில் கண்ணுங் கருத்துமாயிருத்தல், உலகம் பழியா வழியில் நடந்துகொள்ளுதல், பெரியோர்களுக்கு அஞ்சி நடத்தல், நல்வழிகளைப் பின்பற்றல் முதலியவற்றில் கட்டுப்பட்டிருத்தல் வேண்டும் என்ற கொள்கையும் அக்காலத்தில் இருந்தது. அத்துடன் சில சுதந்தரங்களும் அவர்களுக்குண்டு. அவற்றுள் சோலை விளையாட்டும் ஒன்று. சிலவற்றில் கட்டுப்பாடும், சிலவற்றில் சுயேச்சையும் இருக்க வேண்டுவது மக்களுள் ஒவ்வொருவருக்கும் இன்றியமையாததாகும். அங்ஙனமன்றி, ஒன்று அதிகப்பட்டும், மற்றொன்று குறைந்தும் தோன்றுமாயின், அந்நாடோ, அவ்வகுப்போ, கேடுறல் கண்கூடு. இதை நம் பழந்தமிழ் நாடு நன்குணர்ந்திருந்ததென்பது தெள்ளிதின் புலப்படுகின்றது.

# 4. குடிகளின் குணச் சிறப்பு

அவண் அழகிய பறவைகள் பல வசித்து வந்தன. அப் பறவைகளே வைகறையை மக்கட்கு உணர்த்தின. அவை கள் பேசின பேச்சரவத்திலேயே பெண்டிரும் ஆட வரும் துயிலுணர்ந்து, தத்தம் வேலைகளில் நுழைந்தனர். அவண் வதிந்த குடிகள் இடம்பட வீடிடாது, அவரவர்கள் குடும்பத் தொகைக்கும் செல்வத்திற்கும் ஏற்றவாறு இல்லங்களை அமைத்துக்கொண்டிருந்தார்கள்.

ஒவ்வொரு வீட்டின் பின்புறத்திலும் சிறுதோட்டம் ஒன்று இருந்தது. அதில் சிற்சில காய் கறிகளும், மலர் பூத்த கொடி செடிகளும், இடையிடையே நிழல் தரும் மரங்களும் காணப்பட்டன. அவ்வீட்டினர் அவற்றைப் பாதுகாத்தற்கென ஒரு நாளில் சிறிது நேரத்தை ஒதுக்கி வைத்திருந்தனர். யாவருக்கும் அதில் ஊக்கம் மிக்கிருந் தது. அதனால், அவர்கள் பயன்படும் பொருள்களையும், தேகப்பயிற்சியையும் ஒருங்கே எய்தினார்கள். தண்ணீர் பாய்ச்சுங்கால் அவர்கள் பாடும் பாட்டுகளின் ஒலி, அம் மலை நாட்டை நிரப்பியது. வீட்டின் முன் புறம் பந்தலின் மேல் விடப்பட்ட மலர்ந்த கொடி அவ்வீட்டை மிகுதியும் அழகு படுத்திற்று. அதன்றியும், ஆதித்தன் வெப்பத்தி னால் அல்லலுறா வண்ணம் எப்போதும் குளிர்ந்த காற்றை யும் நறு மணத்தையும் வீசி, அஃது உள்ளுறைவோர்க்கு இன்பத்தையுமளித்தது. வழி நடப்போரும் சிறிது தங்கி அம்மனைக்கு ஆசி கூறிச் சென்றனர்.

அரசரைப் போன்றே அக்குடிகளுக்கும் ஈகையில் விருப்பம் மிகுந்திருந்தது. 'அரசன் எவ்வழி, அவ்வழிக் குடிகள்,' என்பது பழமொழி அன்றோ? அவர்கள்

விருந்தினரை உபசரிப்பதில் வேட்கை பூண்டிருந்தார்கள். ஒழுக்கமுறை அவர்களுடன் உறவாடிற்று. வாய்மையும் பணிவும் அவர்களிடம் வாழ்க்கை கொண்டன. ஒவ்வொரு வீட்டிலும் மனைவியும் கணவனும் மனமொத்து வாழ்ந்தனர். 'இன்பத்திற்கிருப்பிடம் இல்லறம்' என்பதை அவர்கள் வாழ்க்கை காட்டிற்று. ஒவ்வொருவரும் மக்களைப் பெற்று மகிழ்ந்தனர். தத்தம் கடமைகளைத் திருத்தமுறச் செய்வதில் இரு பாலார் கருத்தும் ஊன்றியிருந்தது; இருபாலாரும் கடவுள் பக்தியில் கனிந்து நின்றனர். சிறுவர் சிறுமியரும், பெற்றோரின் ஒற்றுமையாகிய உணவை உண்டு, நற்குண ஆடையை உடுத்து, இறையன்பின் அணியைப் பூண்டு வளர்ந்தனர்.

அம்மலைமீது அழகிய கட்டமைந்த அரண் ஒன்று இருந்தது. அவ்வரண், பரப்பு நீளம் முதலியவற்றில் வானத்தையும், சுனைகள் வான்மீனையும்ஒத்திருந்தன. அவ்வரண் மலைமேல் இருந்தமையின் ஏணிக்கும் எட்டா உயர்ச்சியையும், கல்ல முடியாத அடி அகலத்தையும் பெற்றிருந்தது. பகைவர் விடும் படைக்கலங்கள் தம்மீது பாயாவண்ணம் போர்வீரர் இருந்து போர் செய்யும் பரந்த இடங்கள் பல அவண் உண்டு. அஃது எந்த ஆயுதங்களினாலும் அழித்தற்கு இயலாத திண்ணரண். பகைவர் எறியும் படைக்கலங்களைப் பயனற்றவையாகச் செய்வதற்கும் மீண்டும் அம்புகளைப் பகைவர்மாட்டுச் செலுத்துதற்கும் ஏற்ற யந்திரங்கள் பல அவ்வரணில் அமைந்திருந்தன. இதனால், அவ்வரணைக் காத்தற்குப் போர் வீரர் சிலரே போதுமானவராயினர். வானத்தையளாவிய மாளிகைகளின் சுவர்களில் பல சித்திர வேலைகள் மிளிர்ந்தன. நில வளத்தை மிகுதிப்

படுத்தும் நீர் நிலைகள் பல அவண் உண்டு. மக்கள் விரும்பும் பொருள்கள் யாவும் ஆங்கு நிறைந்திருந்தன. இன்ன இயற்கை அமைப்புகள் பலவும் அவ்வரணில் அமைந்திருந்தன.

## 5. வேள் பாரியாரின் பெருந்தகைமை

அழகிய அகன்ற ஓர் இடத்தில் சித்திரங்களால் அணி செய்யப்பட்ட அரண்மனையொன்று காணப்பட்டது. அத் தெருவும் அம்மாளிகையும் அரசருக்குரியவை என இயம்பற்குப் பல சான்றுகள் அவணிருந்தன. வெண்சுதை தீற்றப் பெற்ற சுவர்கள் பளிங்கு போலத் தங்களை நோக்குபவர் உருவத்தைக் கவர்ந்து காட்டின. அவ்வரண்மனையின் மேன்மாடத்தில் நாட்டப்பட்ட கொடிகள் வானத்தை அளாவின. நாலவிட்ட முத்துப் பவழ மாலைகளின் வனப்புக் கண்டோர் மனத்தைக் கவர்ந்தது. நிலா முற்றங்கள் சந்திரனை வரவேற்றன. அவ்வரண்மனையின் முன்புறத்தில் மக்கள் நுழைதற்கேற்ற அகன்ற வாயிலும், வனப்பமைந்த சில பொருள்களும் அமைந்திருந்தன. மன்னரை நாடிப் போதருவோரை வரவேற்கச் சிலர் வீதியை நோக்கிக்கொண்டிருந்தனர். காவற்காரரின் விழிப்பும் வீரமும் கண்டோரை வியக்கச் செய்தன. முரசொலி மிகக் கெம்பீரமாக முழங்கிற்று. ஆனால், அருவி நீர் ஆர்ப்பும், இரவலர் வாழ்த்தோதையும், வீரர் கழலார்ப்பும், புலவர் கவியொலியுங் கலந்து அரச வாயிலின் முழங்கும் அம் முரசொலியை அடக்கின.

அவ்வரண்மனையின் மற்ற மூன்று பக்கங்களிலும் வனப்பு வாய்ந்த பெரிய மலர் வனமும், தாமரை, அல்லி முதலிய நீர்ப் பூக்களுக்கு இருப்பிடமான தடாகங்களும்,

இளைப்பாறுதற்குப் பளிங்கு மேடைகளும் அமைந்திருந் தன. ஓங்கி வளர்ந்திருந்த தருக்கள், நாட்டைக் காக்கும் போர்ச் சேவகரெனக் காணப்பட்டன. அவண் விளையா டும் அரசமகளிர் வழிச்செல்வோர் கண்ணிற் படாமலிருத் தற்கு அஃதோர் அரணாயிருந்தது. வெட்டி விடப்பட்ட குறுஞ்செடிகள், குடையெனக் கவிந்து விளங்கின. கண் கவர் வனப்பு வாய்ந்த செடிகள் பல, தம் மலர்களை ஏந்தி நின்றன. அங்குச் செல்வோர் அவற்றைப் பறித்து அழகு பார்த்தல், மோத்தல், சூடுதல் செய்யாமல் மேல் நடக்க மனமெழார். அவை தம்மைக் காண வருவோருக்கு ஏதேனும் ஒன்றைக்கொடுத்து மகிழ்விக்கும்பெருந்தன்மை யாளரெனத் திகழ்ந்தன. ஆங்காங்குப் பந்தரிட்டாலெனப் படர்ந்த கொடிகள், அம்மலர் வனத்தின் மேன்மையைக் காண வருபவரின் இளைப்பை நீக்கின.

சில இடங்களில் தரையில் படர்ந்த கொடிகளின் இடையிடையே பல நிறச் சிறு மலர்கள் மலர்ந்திருந்தன. அது சித்திர வேலை செய்யப்பட்ட இரத்தினக் கம்பளம் விரித்தாலென மிளிர்ந்தது. பசும்புல் வளர்ந்த இடங்களும் சில உண்டு. அவ்வரண்மனையின் பின் புறத்திலிருந்த மலர் வனத்திற்கேகப் பளிங்குக் கற்களினால் பாதையொன்று செப்பனிடப்பட்டிருந்தது. அதன் இரு மருங்கும் கீரைப் பாத்திகளைக் காணலாம். மகளிர் பந்தாடும் பகுதிகளும் அவண் அமைந்திருந்தன. இன்னும் மன்னன் கொலுமண்ட பம், அமைச்சருடன் தனித்துப் பேசும் இடம், புலவர் நூலா ராய்ச்சி செய்யும் மாடம், நீதிச் சாலை, விருந்துண்ணும் மடம், ஆதுலரை உபசரிக்கும் அறச்சாலை முதலியனவும் தனித்தனியே கட்டப்பட்டிருந்தன.

அப்பறம்பு நாட்டிற்கும் அவ்வரண்மனைக்கும் தலைவ ராய் விளங்கியவர் முற்கூறிய பாரியார் என்பாரே. வள்ளல் கள் எழுவரில் அவரே முதன்மை பெற்றவர் என்பதை முன்னரே அறிவோம். அவர் நற்குணங்கள் பலவற்றிற் கும் உறைவிடமெனத் திகழ்ந்தனர். ஆயினும், வரையாது ஈயும் வள்ளற்றன்மையே அவரிடம் தலை தூக்கி நின்றது. யாசகரைக் காணின், அவர் மனம் உருகும். விரும்பியவர் விரும்பிய வண்ணமே பொருள்களை ஈவதில் அப்பாரி மன்னர் ஒரு நாளும் பின் வாங்கியதில்லை. பிறர் துயரைக் களைவதிலேயே அவர் கருத்து ஊன்றி நின்றது. அவர் ஓரறிவுயிரின் துன்பத்தையும் தமக்கு நேர்ந்த துன்ப மெனவே உன்னுவர்.

தம்மை நோக்கி வந்தோரை ஆதரிப்பதில் அவருக்கு அவரே ஒப்பாவர். அவர் பறம்பு மலையின் முடியிலிருந்து இழிதரும் நீரினும் மிக்க இனிமையும் மென்மையும் வாய்ந் தவர். அதிதிகளிடம் அவர் காட்டிய அன்பிற்கோர் அளவில்லை. இன்சொல்லும், இனிய முகத் தோற்றமும் அவருக்கே உரிமை பூண்டு விளங்கின. அதிதிகளுக்கு உணவூட்டி மிகுந்ததையே அவர் உண்பர். இப்பண்பே அவர் விளைநிலம் ஒன்றுக்குப் பலவாகப் பலனளித்தற்குக் காரணமாயிருந்தது. விருந்தினர் உண்டதன் மிகுதியை அருந்தும் அன்புடையார் நிலத்திற்கு வித்தும் இடல் வேண்டுமோ ! அஃதின்றியே அது தெய்வ அருளால் விளைந்து நற்பயனை அளிக்குமன்றோ ! ஒளி தங்கிய நுதலை உடைய விறலியர் பலர்க்கும் அவர் வண்மை பல பரிசில்களை ஈந்தது. இறைவன் எங்ஙனம் ஒருவன் இட்ட மலராத பூங்கொத்தையும், புல்லிய இலையுடைய எருக்க மலரையும்

ஏற்று, அவற்றை இட்டவன் விருப்பிற்கேற்பப் பயனளிக் கின்றனவே, அங்ஙனமே பாரி மன்னரும், அறிவின்மை யும் அற்பக்குணமுமுடையவர் தம்மிடம் வரினும், அவர் கேட்டதை ஈவதில் சுருங்குவதில்லை. அவரை நோக்கி வரும் ஒவ்வொருவரும் தாம் விரும்பியதைப் பெறலாம் என்ற உறுதியைக் கொண்டே போதருவர். இவ்வுறு திக்கு ஒரு நாளும் குறைவு ஏற்படுவதில்லை. வந்தவருக்கு இல்லையெனக் கூறல் அவர் நாட்குறிப்புப் புத்தகத்தில் இல்லையெனவே இயம்பல் வேண்டும். தம்மாலோ, பெரியோராலோ திரட்டப்பட்ட பொருளைப் புதைத்தழகு பார்த்தல் அவரை அணுகிற்றிலது. செல்லும் இயல்பு வாய்ந்த செல்வத்தைச் செம்மையில் செலவிடலே சிறந்த தென்பதை அவர் நன்குணர்ந்திருந்தனர். வானத் துளி யால் பைங்கூழ் தழைத்தல் போன்று, பாரியாரின் ஈகை மாரியால் இரவலர் வாழ்க்கை தழைத்தது. இது பற்றி அன்றே, 'கொடுக்கிலாதானைப் பாரியே என்று கூறினும் கொடுப்பாரிலை,' எனச் சுந்தரமூர்த்திகளும், 'வரை புரை களிற்றொடு நன்கலன் ஈயும் உரைசார் வண்புகழ்ப் பாரி,' என அவ்வையாரும் அவ்வள்ளற் பெருந்தகையாரைப் புகழ்ந்தோதுவாராயினர்?

பாரியாருக்கு இத்தகைய வள்ளற்றன்மையுடன், கல்வி நலனும் இருந்தது. தமிழ்ப் புலமையில் அவர் சிறந்து விளங்கினர்; தமக்குக் கிடைத்த ஓலைச் சுவடிகளைப் பாதுகாப்பதில் பெரிதும் கவலை செலுத்தினர். பல்லோ ரையும் வினவி நூல்களைத் திரட்டுதல் அவர் வேலைகளில் ஒன்று. அவர் காலம் நேரும்போதெல்லாம் நூல்களைப் படித்துப் படித்து, அவற்றிலுள்ள ஒவ்வொரு சொல்லையும்

ஆய்ந்து ஆய்ந்து பார்ப்பர். அச்சொற்களின் நயத்தைத் துய்த்தலிலேயே அவர் மனஞ் செல்லும். அறிவைப் பெற்றதன் பயன் அஃதே என்பது அவர் எண்ணம். அவர் அவ்வநுபவம் உள்ளடங்காமையின், நகைப்பர்; அருகிலுள்ளவர்களுக்கு அவற்றை எடுத்து இயம்பி மகிழ்வை ஊட்டுவர். அப்போது தமிழ்ப் புலவரின் நுண்ணிய அறிவு அவர் கண்முன் நிற்கும். 'இவ்வுலகில் யாவரினும் சிறந்தவர்கள் புலவர்களே! இயற்கையின் தத்துவம் அவர்தம் நாவினிலன்றோ பொருந்தி உள்ளது! அவர்களில்லாவிடில், இயற்கைப் பொருள்கள் அழகு பெறல் யாங்ஙனம்! இயற்கை இன்பமும், இறையருளும் கலந்துறையும் பேழை, புலவர் நெஞ்சமே. அவர் மனப்பேழை திறக்கவில்லையேல், எம் போன்றோர் இன்பம் அடைதல் எவ்வாறு! அவர்களை எல்லாம் வல்ல இறைவனுக்கு அடுத்த படியில் வைத்தலே தகுதி,' எனக் கருதுவர். ஆதலின், தமிழ்ப் புலவர் மாட்டு அவர் கொண்ட மதிப்பும், அவர்களுக்கு அவர் ஈந்த கொடையும் அளவு பட்டனவல்ல. அவர் அருள் மாரி, இரவலர் நிலத்தில் மாத்திரமேயன்றிப் புலவர் பூமியினும் பெய்தது. எத்துணைச் சிறந்த பொருளை அவருக்கீயினும், 'இவர்தம் பெருமைக்கேற்றவாறு ஒன்றுந் தந்திலமே!' என இரங்கும் பெருந்தன்மை பாரியாருக்கு இயற்கையில் அமைந்திருந்தது. தமிழ் வளர்ச்சியே தம் நாட்டின் வளர்ச்சிக்கும் காரணம் என நினைக்கும் பெருந்தகையாளரில் அவரும் ஒருவர். அவர் இன்முகத்தைக் கண்டதும் புலவர் மனம் பகலவனைக் கண்ட தாமரையென அலரும். தமிழ்த்தாய்க்கு அவர் ஒரு சற்புத்திரராய் விளங்கினர் எனல் மிகையன்று.

'அமிழ்தெனத் தோன்றி உலகைக் காத்தலிற் சிறந்தது மழை ஒன்றே எனச் சிலர் கூறுவர் ; அங்ஙனம் கூறுவார் பாரி வள்ளலாரும் ஒருவர் உளர் என்பதை மறந்தனர் போலும்!' எனப் புலவர் போற்றும் பெருந்தன்மையும் அவருக்குண்டு. பரிசில் பெற விழைந்து பாடுவோர்க்குப் பறம்பு நாட்டைப் பகிர்ந்து கொடுக்கும் வள்ளன்மை ஒன்று மாத்திரம் அவருக்குரித்தன்று. பரிசிலர், தம்மையே வேட்பினும் மறுக்காது ஈந்து, அவர் அளவில் நிற்கும் இன்னலமும் அவரைச் சார்ந்திருந்தது. சேர சோழ பாண்டியரைக்காட்டிலும் பாரி மன்னர் ஈகையில் இசை பெற்றவர் எனக் கூறல் மிகையாகாது. அவர் நாடும் குடிகளும் அளவுக்குட்படினும், அவர் நற்பண்புகளும் பெருந்தகைமையும் அளவு பட்டனவல்ல.

பாரி மன்னரின் செங்கோன்மை குடிகளைச் செம்மைப் படுத்திற்று ; நடு நிலைமை குடிகளின் நட்புரிமையைத் திரட்டியது ; செல்வருக்கும் வறுமை உற்றோருக்கும் வழங்கிய ஒரே நீதி அவர்களைத் திருப்திக்குள்ளாக்கியது. கள்ளர் பயம் அந்நாட்டைக் கனவிலும் வருத்திலது. அரசர் அப்போதைக்கப்போது மேற்கொண்ட வேட்டையினால் மிருகத் தொல்லை நாட்டை விட்டொழிந்தது. மன்னர் வீரம் பகைவரை மயங்கச் செய்தது. நாடு இன்பமே உற்றுத் துன்பமின்றி வாழ்ந்தது.

அரசரும் குடிகளும், ஈன்ற தந்தையும் மக்களும் என ஒத்து உழைத்தார்கள். நாடு முழுதும் ஒரு குடும்பமெனத் திகழ்ந்தது. குடிகள் மதிப்பு மன்னர் மாட்டும், அரசர் அன்பு குடிகள் மாட்டும் பதிந்திருந்தன. ஒரு சாரார் அடையும் நன்மையோ தீமையோ, மற்றொரு சாராரையும்

பிணித்தது. குற்றங் கடிதல், அறிவுணர்த்தல், இசை பெறுதல், இக்காலங்களிலேதான் பாரியார் மன்னராய் விளங்கினர். மற்ற இன்ப துன்பங்களில் அவர் குடிகளின் தோழராகவே காணப்படுவர். காரணமற்ற கடுஞ்சொல்லை அவர் வாய் வழங்கிலது. அவர் குடிகளின் குற்றங் குறைகளை முறையிடுதற்கு எளிமையுடன் காட்சி அளிப்பர். அமைச்சரும் அரசரும் வேறலர் எனக் கூறுமாறு நடந்து கொண்டனர். அமைச்சரின் ஆதரவிலேயே அவர் அரசு நடந்தது. காலத்திற்கேற்ப அமைச்சரை அடக்கி ஆளும் வன்மையும் அவருக்குண்டு. பொதுவாக மந்திரியாரும் மற்றத் தலைவரும், இல்லாத ஆணைகளைக் குடிகளுக்கு இயம்பி வருத்துவதுண்டு. அம்முறையில் குடிகள் துன்பமுறுதவாறு அவர் மேற்கொண்ட முயற்சி யாரையும் வியக்கச் செய்தது.

இங்ஙனம் புலமையிலும், வள்ளன்மையிலும் திளைத்து வாழ்ந்த வேள் பாரியார், ஒரு நாள் வேட்டையை வேட்டுக் கானகஞ் செல்லப் புறப்பட்டனர். அவ்வமயம் நல்ல நிமித்தங்கள் பல அவருக்குப் புலப்பட்டன: வலத் தோளும், வலக் கண்ணும் துடித்தன. அவர் உள்ளத்தில் உவகை ததும்பிற்று. அதற்குக் காரணம் இன்னதென அவருக்குத் தோன்றவில்லை. அவர் தம் கடமையை இனிதே முடித்து நாடு திரும்புங்கால் தம் நாட்டை அணி செய்து இலங்கும் இளமரக்கா ஒன்றில் நுழைந்தனர். பச்சைக் கம்பளம் விரித்ததெனப்பொலியும் புற்றரையும், விளக்கேற்றினலென மிளிரும் சிவந்த மலர்களும், வள்ளியோரெனக் கனிந்த கனிகளை ஏந்தி நிற்கும் மரங்களும், அவரை வரவேற்றன. அங்குச் சிறிது நின்றனர்.

ஆதித்தன் மேற்றிசைக்கண் செவ்விய தகடு போன்று அசைந்துகொண்டிருந்தான். அச்செங்கதிர் படர்ந்த மலைச் சிகரங்களும், மரங்களும், செடிகளும், புற்பூண்டு களும், கொடிகளும் பொன்னிறமாய் விளங்கின.

அங்குக் கொழு கொம்பின்றிக் காற்றினால் அலைந்தும், வெயிலினால் வாடியும் கீழே படிந்து துன்புறும் வெண் முகை அரும்பிய முல்லைக் கொடியொன்று அவர் கண்ணிற் பட்டது. அக்காட்சி அவரைப் பெரிதும் வருத்திற்று.

அஃது, 'என்னைத் தாங்குவார் ஒருவருமின்றித் தளர் கின்றேன். என்னைக் காத்தல் நின் பரம்,' எனப் பல் லெல்லாம் காட்டி இரத்தல் போன்று தோன்றிற்று. "அந்தோ! புற்பூண்டுகளுக்கும் ஓரறிவு உண்டன்றோ! தங்கள் நிலைமையைப் பிறரிடம் இயம்ப வன்மையற்ற தாலும், இருந்த இடத்தை விட்டு வெளிப்படையாகப் பெயராமையாலும் அவற்றிற்கு உயிர் இல்லையெனச் செப்பல் தகுதியுடையதாமா! அவை வளர்ந்து, பூத்து, காய்த்து, கனியவில்லையா! தம் குடும்பத்தை விருத்தி செய்யவில்லையா! வேர் ஓரிடத்திலிருந்து பல பக்கங்களி லும் பரவி ஓடவில்லையா! கொடிகள் கொம்புகளின்மீதும் பந்தல்களின்மீதும் படரவில்லையா! இச்செயல்கள் யாவும் அவற்றிற்கும் உயிர் உண்டு என்பதைத் தெளிவிக்கும் அறிகுறிகள் அல்லவா! எப்போது உயிர் உண்டோ, அப்போதே அறிவு உண்டு எனத் தீர்மானித்தற்குத் தடை யாது! அவை வேரினால் உணவை உண்கின்றன. நாம் வாயின் மூலம் உண்கின்றோம். அவை இலைகளின் வழி மூச்சு விடுகின்றன. நம் மூச்சு வெளிப்படும் இடம் நாசி. நம் குறைகளைப் பிறரிடம் இயம்புதற்கும், நாமே

போக்கிக்கொள்ளற்கும் நமக்கு வன்மை உண்டு. அவற் றிற்கு இவ்வியல்பு குறைவுபட்டுளது. இங்ஙனம் தம் குறையைத் தாமே நீக்கிக்கொள்ளும் வன்மையற்ற உயிர் களுக்கன்றோ யான் உதவி புரிதல் வேண்டும்! அங்ஙன மின்றேல், யான் இருந்தும் பயனென்னை! இறைவன் எனக்குச் சில நலன்களை ஈந்ததற்குக் காரணம் யாது! எளியோர்க்கும், துணையற்றோர்க்கும் உதவ வேண்டும் என்பதன்றோ! அங்ஙனம் இயற்றவில்லையேல், அது கள்ளத்திலும் வஞ்சனையிலும் சாராதோ! பின் எனக்கும் வன்மனக் கள்வனுக்கும் வேறுபாடு யாது! சிறிது துன் பத்தைக் கருதி யான் வழியே செல்லின், யான் தன்னலங் கருதும் தன்மையன் என்பதில் ஐயம் என்ன! பிற உயிர் களுக்கு உதவி புரியாதவன் கடவுள் கருணையை எதிர் பார்த்தல் யாங்ஙனம் பொருந்தும்!

" இறையின் உருவம் அன்பே அல்லவா! கடவுள் அன்பையே உருவெனக் கொண்டுள்ளான் என்பதே ஆன்றோர் கருத்து. அன்பு வேறு இறை வேறு அன்று என்பதைச் சான்றோர் நன்குணர்வர். அவன் நம்மிடம் எதிர் பார்ப்பது அன்பு ஒன்றே. அன்போடு அகங் குழைவார்க்கன்றி அம்மாணிக்கத்தை அடைதற்கு இய லாது. அன்புத் தகளியில் ஆர்வ நெய்விட்டு இன்புருகு சிந்தைத் திரியிட்டு ஞான விளக்கேற்றியவர்க்குத்தான் அப்பரம்பொருள் காணப்படும். இறைவனை அகப்படுத் தும் பொறியுமஃதே; வேறொன்றில் அவன் கட்டுப் படுபவன் என நினைத்தல் அறியாமையே. அப்புண்ணி யனைக் காண்டலும் அடைதலும் மாத்திரம் போதுமோ! அவன் கருணையையும் அடைதல் வேண்டுமன்றோ! அதற்

குச் சிறந்த வழி ஒன்றுளது: அதுவே மேன்மையை உடையது! அதையே சான்றோர் பற்றுகின்றனர்! அதற்கே பெரியோர் மதிப்பீவர்! உலகமே அழியினும் அழியாது நிற்பது அஃதொன்றே! அது யாதோவெனில், அவனால் உண்டாக்கப்பட்ட உயிர்கள் மாட்டு அன்பு பூண்டொழுகலே! அதைத்தான் மனு, சிபி முதலியோர் கடைப்பிடித்து ஒழுகினர். சிற்றுயிர் மாட்டும் அன்பு பூண்டொழுகலே சிறந்த மதமெனக் கொள்ளல் வேண்டும். மதத்திற்கு அடிப்படை அன்பே என்பதை யார் புறக்கணிப்பர்! மதத் தலைவர் உலகிற்கு உபதேசித்தவை யாவை! ஓரறிவு உயிர்க்கும் உறுகண் செய்யாமையும், தமக்குத் துன்பிழைத்தவர்க்கும் தீமை புரியாமையுமேயல்லவா! கண்ணன் உலகிற் பிறந்து இயற்றியது யாது! யாவரிடமும் அன்பு கொண்டு நட்புப் பாராட்டியது அன்றோ! அன்பினாலேயே உலகம் நடைபெறுகின்றதென்பதை மறுப்பவர் யாவர்!" என எண்ணிப் பாரியார் தேரை விட்டிழிந்து, கொம்பொன்றிற்காகப் பல பக்கங்களிலும் துருவித் துருவிப் பார்த்தனர். கோல் ஒன்றுங் கிடைத்திலது. 'என் செய்வது!' எனச் சிறிது போழ்து சிந்தித்தனர். உடனே ஓர் உயரிய எண்ணம் அவர் நெஞ்சில் குதித்தெழுந்தது: "தேர் ஒன்று நம்மிடம் உளதே! ஏன் இதை இதற்குக் கொழு கொம்பாக நிறுத்தல் கூடாது! இதுவே தக்கது!" எனத் தீர்மானித்து, "நாத்தழும்பேறப் பாடாத நீயும், இதனைப் பெற்றுக் கவலையொழிக," எனக் கூறி, தாம் இவர்ந்து சென்ற மணிகளால் அலங்கரிக்கப்பட்ட தம் பொற்றேரை அக்கொடியின் அருகில் நிறுத்தி, அக்

கொடியை அத்தேரின்மிசைப் படருமாறு விட்டனர்; சிறிது நேரம் அதைக் கூர்ந்து நோக்கினர். அஃது அதன் மேல் நன்கு படிந்திருந்தது. அதன் இலைகள் மாத்திரம் காற்றில் அசைந்தன. அவ்வசைவு, அக்கொடி தான் யாதொரு துன்பமுமின்றி இருப்பதாகச் செப்புதல் போன்று தோன்றியது. உடனே அவர் நெஞ்சம் குதூ கலத்தினால் நிரம்பியது; முகம் மலர்ந்தது; தோள்கள் பூரித்தன. தாம் வீடு திரும்ப வேறு வாகனம் ஒன்றும் அங்கின்மையால் உடல் வெயர்க்கக் காலால் நடந்து வீடு போந்தனர். ஆனால், அஃது அவரைச் சிறிதும் வருத்தி லது. அன்று முழுதும் அவர் மிக்க ஆநந்தத்தில் ஆழ்ந் திருந்தனர். இறைவன் தமக்களித்த தேகத்தாலாய பயனைப் பெற்றது அன்றே என்பது அவர் கருத்து. அதனால் அவர் அடைந்த இன்பத்தை அளந்து கூறல் ஒருவராலும் இயலாது. அதனால் அவர் தம்மைப் புகழ்ந்து பாடிய புலவர்களுக்கு மாத்திரந்தான் பொன்னையீந்தனர் எனப் புகலுதற்கிடமில்லை. அவர் கருணை தன் துன்பத்தை வாய்விட்டுக் கூறும் வகையறியா ஓரறிவுயிரையுங் களிக்கச் செய்தது. இதற்கு அவர் மாசற்ற மனமே காரணமாகும். இங்ஙனம் குற்றமற்ற நெஞ்சுடன் உண்மை அன்பு கொண்டு செய்வதன்றோ தருமம் எனப் பகருவது! பெற்றுக்கொள்பவர் பலபடப் புகழ்தற்கும் உலகம் அறி தற்குமே செய்யும் தருமங்களல்லவோ இன்று மிகுந்திருக் கின்றன! மனமாசுற்றுச் சொல்லினாலும் உடலினாலும் செய்யப்படுவன உண்மை ஈகையாகுமோ! அவை பய னற்ற ஆரவாரமேயன்றோ!

"பூத்தலை யறாஅப் புனைகொடி முல்லை
நாத்தழும் பிருப்பப் பாடா தாயினும்
கறங்குமணி நெடுந்தேர் கொள்கெனக் கொடுத்த
பரந்தோங்கு சிறப்பிற் பாரி" —புறநானூறு

எனப் பாரியாரைப் புகழாத புலவர் இலர். மாரியின் வள்ளன்மையினும் பாரியாரின் வள்ளன்மை மேம்பட்டதென்பது கபிலர் கருத்து. 'தன்னலம் பாராத் தகைமையாளன்,' எனக் கபிலரும், மற்றைய புலவரும் பல இடங்களிலும் பாரியாரைப் புகழ்ந்துள்ளார். பாரியார் பறம்பு மலை ஒழியத் தம்மைச் சார்ந்த மற்ற முந்நூறு ஊர்களையும், பல் வளங்களையும் இரவலர்க்கீந்து, கீர்த்தி பெற்று வாழ்ந்து வந்தனர்.

ஒருவர் புகழுடம்பு பெற்று என்றும் வாழ்தற்கு இதைவிடச் சிறந்தது வேறொன்றும் இல்லை எனவே கூறலாம். இஃதொன்றே இன்னும் சான்றோர் நெஞ்சில் அமர்ந்து வாழும் சால்பைப் பாரியாருக்கீந்தது.

இன்னணம் குலமும், குணமும், பொருட்செல்வமும், குடிவளமும், கல்விச் செல்வமும், கொடை நலனும் வாய்க்கப்பெற்ற மன்னரின் இயல்பிற்கேற்ப அவருக்கு இல்லக்கிழத்தியாரும் அமைந்தனர். அவர் நங்கை என்னும் பெயர் வாய்ந்தவர். இல்லாளின் நல்லியல்புகளேயல்லவா இல்லை அணி செய்வன? மக்கள் தோன்றுதற்கும், தோன்றிய மக்கள் சான்றோராய்த்திகழ்தற்கும் தாயினும் சிறந்த கருவி வேறு யாதுளது? இத்தகைய தாயையும் மனைவியையும் பெற்றவரல்லவா உலகில் தவமுடையவராவர்! இதற்கு மற்றெத்தவத்தை ஈடு சொல்ல இயலும்! பின் வருந் தன்மைகளை ஆராய்ந்து இயம்பி, அவற்றிற்கேற்ப நடந்து

கொள்ளுமாறு தம் கணவரை இயக்கும் மந்திரத் தலைவி யர் இல்லக் கிழத்தியரே என்பது சான்றோர் கருத்து. இதனாலன்றோ, மனைவி அரசை நற்பண்பில் நிறுத்தும் ஓர் அமைச்சனுக்கு ஒப்பாவள் என நூல்கள் அறை கின்றன? அரசு பல குடும்பங்கள் ஒருங்கு திரண்ட ஒரு திரட்சி. குடும்பம் பல மக்கள் சேர்ந்த ஒரு குழு. ஒரு மன்னனுக்குள்ள பொறுப்புகள் பலவற்றைப் போன்றே குடும்பத் தலைவனுக்கும் உண்டு. மாண்பற்ற மனைவியை அடைந்தோர் தம் கடமைகளைத் திருந்தச் செய்தல் அருமையினும் அருமையே. நற்குண நற்செய்கைகள் பொருந்திய பெண் மணியை இல்லக்கிழத்தியாகப்பெற்ற தலைவனுக்கு இல்லாதது ஒன்றுமில்லையெனவே கூறல் வேண்டும்.

"இல்லதே னில்லவள் மாண்பானல்? உள்ளதேன்
இல்லவள் மாணக் கடை?" —திருக்குறள்

அதைக் காட்டிலும் சொர்க்கம் வேறு உளதாகக் கருது பவர் அறிவு நிரம்பப் பெறாதவரே! இன்னணம் நல் லியல்புகள் பலவும் வாய்க்கப்பெற்ற தம் இல்லத் தலைவி யாருடன் வேள் பாரியார் மிக இன்புற்று வாழ்ந்து வந்த னர். இது நிற்க.

## 6. கபிலரின் மேன்மை

அக்காலத்தில் கபிலர் என்ற புலவர் ஒருவர் இருந்தனர்; அவர் அந்தணர் குலத்திற்றோன்றிய பெரியார். கவி பாடும் வன்மை அவருக்கிருந்தது. அவர் இனிய கவிகள், புறநானூறு, அகநானூறு, ஐங்குறு நூறு, பதிற்றுப்பத்து, கலித்தொகை முதலிய தொகை நூல்களில் இடம் பெற்

முள்ளன. இன்னா நாற்பது என்னும் ஒரு சிறு நூலும் அவரால் இயற்றப்பட்டதே. பன்னிரு பாட்டியலிலும் அவர் செய்யுட்கள் மிளிர்கின்றன. அகுதை, இருங்கோ வேள், ஓரி, சேரமான், நள்ளி, மலயமான், திருமுடிக்காரி, விச்சிக்கோன் முதலியோர் அப்புலவர்தம் பொய்யா மொழியால் அலங்கரிக்கப்பட்டனர். ஆயினும், பாரி யாரின் பண்புகளையே அவர் நாப் பெரிதும் நவின்றது.

புலமையில் மாத்திரம் கபிலர் உயர் நிலையடைந்தவ ரல்லர்; கேள்விச் செல்வத்தையும் செவ்வனே பெற்றி ருந்தனர். ஐம்புலன்களும் அவருக்கு அடங்கிப் பணி இயற்றின. அவை தமக்குத் தலைமையுற்றனவல்ல என்பதை யும் தாமே அவற்றிற்குத் தலைவர் என்பதையும் அவர் நன்கு உணர்ந்திருந்தனர். அழுக்காறு அவர் அருகிலும் அணுகிற்றிலது. கேவலம் பொருளுக்கெனவே பிறரைப் பாடுதல் என்ற எண்ணத்திற்கும் அவருக்கும் அதிக தொலைவு எனவே கூறல் வேண்டும். யாரைப் பாடினும் அவருக்கு இல்லாத இயல்புகளைப் பற்றியேனும் இருப்ப வற்றைப் பதின்மடங்காகப் பெருக்கியேனும் புகழ அவர் கற்கவில்லை. யாவரிடத்திலும் கண்ணோட்டமுடையவரே யாயினும், குற்றங் கண்டுழி இடித்துரைப்பதில் பின் வாங்கல் அவருக்கு இயலாது. வாய் படைத்தது வாய்மை செப்பற்கே என்பதை அவர் ஒரு போதும் மறந்திலர்.

'புலனழுக் கற்ற அந்த ணாளன்'

'வெறுத்த கேள்வி விளங்குபுகழ்க் கபிலன்'

'பொய்யா நாவிற் கபிலன்'

எனும் புலவர் பலரின் போற்றலே இவற்றிற்குத் தக்க சான்றாகும்.

இத்துணைத் தூய குண நலங்களும், கவிப் புலமையும் அவரிடம் குடி புகுந்திருந்தன. ஆனால், அவர் அவற்றுடன் நின்றுவிடவில்லை. அவற்றை அணி செய்தற்குத் தெய்வ பக்தியும் அவரிடம் திகழ்ந்தது. அவர் தம் பக்திப் பெருக்கால் அந்தாதித் தொடையில் சிவபிரானைப் போற்றி அலங்கரித்து உள்ளார். இதை இடைக்காடன் பிணக்குத் தீர்த்த திருவிளையாடல் பதிமூன்றாம் திருவிருத்தத்தில் 'எனையந்தாதி சொன்னவன் கபிலன்,' எனச் சிவபெருமான் திருவாய் மலர்ந்தருளியது வற்புறுததும்.

அவர் பல பேரைப் பாடிப் புகழ்ந்திருப்பினும், யாவரிடத்தும் நட்புரிமை கொள்ள அவர் மனம் இடந் தந்திலது. தம் பண்பிற்கேற்றவரும், தூயரும் கிடைத்த போதன்றோ பெரியோர் நட்புக் கொள்வர்? அத்தகையோர் எளிதில் கிடைப்பரோ! கிடைப்பினும், பன்னாள் அவரை ஆய்ந்து ஆய்ந்து பார்த்தல் வேண்டுமன்றோ? ஒருவரைக் கூடிப் பிரிதல், முதலில் புகழ்ந்து பின்னர் இகழ்தல், மனத் தொடர்பின்றிப் பழகல், முன்னொன்றும் பின்னொன்றும் கூறல் (புறங் கூறல்), துன்பம் நேருங்கால் உதவி செய்தலின்றி விட்டேகல் முதலியன சான்றோர் நட்டோரிடம் செய்தலில்லை. பெரியோர் இச்சிறிய கருத்துகளை மனத்திற் பொதிந்துகொண்டு, தாம் பல பேரிடம் பழகினும் தக்கவரிடமே உண்மை நட்புப் பாராட்டுவர்.

"ஆய்ந்தாய்ந்து கொள்ளாதான் கேண்மை கடைமுறை
தான்சாந் துயரந் தரும்." —திருக்குறள்

இம்முறைகளை நன்குணர்ந்த வேள் பாரியாரின் பண்புகள் கபிலரை வசப்படுத்தின. அவர் பாரியார் இயற்றும்

ஒவ்வொரு காரியத்தையும் ஊன்றி ஊன்றி நோக்கினர். பாரியார் குடிகளிடம் பாராட்டும் அன்பும், குற்றங்களை ஆராய்ந்தறியும் உணர்வும், அமைச்சரிடம் காட்டும் ஆர்வமும், செங்கோல் நடாத்தும் திறமையும், ஆதுலர்க்களிக்கும் ஆதரமும் எவர் மனத்தைத்தான் கவரா! கபிலருக்கு வியப்புத் தோன்றிற்று. "இவன் தொடர்பு நமக்கு இன்றியமையாது வேண்டற்பாலதேயாகும். இப்பெருந்தகையாளனோடு நட்புக் கொள்ளலே நம் பிறவிக்குப் பயன்," எனத் தீர்மானித்த அறிவிற் சிறந்த கபிலர், வேள் பாரியாரிடம் நட்புப் பூண்டனர்.

இம்முறையில் தமிழ்ப் புலவராகிய கபிலருக்கும் வள்ளலாராகிய வேள் பாரியாருக்கும் நட்புண்டாயிற்று. உலக அறிவிலும் நூற் புலமையிலும் சிறந்த அப்புலவர் கூட்டுறவினால் மன்னர் பெற்ற அருந்திறன்கள் பற்பல. அரையர் போதிய அறிவுடையரேயாயினும், ஒரோவழித் தவறலும் கூடும். அவ்வமயம் நிறைந்த மதியுடையோர் அவருக்கு அறிவுச்சுடர் கொளுத்தல் இன்றியமையாதது ஆகும். சுடர் விளக்காயினும், நன்றாய் விளங்கிடத் தூண்டுகோல் ஒன்று வேண்டுமன்றோ? குற்றமிழைத்தவழி இடித்துரைக்கும் பெரியோரைப் பெற்றிராத இறைவர் தம்மை எதிர்க்கும் ஒன்னலர் இல்வழியும் கெடுவர் என்பது ஆன்றோர் கருத்து.

குற்றங்களைத் திருத்தித் தம்மை நட்டோரை நல்வழிப்படுத்துந் துணைவரன்றோ உண்மை நட்பினர் எனப்படுவர்! இது யாவராலும் முடிவதொன்றாமோ! சான்றோரையே சார்வதாகும். அத்தகைய சான்றோரில் தலைநின்ற கபிலர் வேள் பாரியாருக்கு உயிர் நட்பினராய்

அமைந்தது பெரும்புண்ணியமே. இவர்கள் நட்பு நாளுக்குநாள் பிறைச்சந்திரனென வளர்ந்தது. உச்சியி லிருந்து உண்ணும் கரும்பென, நட்பின் இனிமை மிகுந் தது. அரசர் அறிவு நலத்திற்கேற்ற முறைகளைக் கபிலரும் முனிவர் தேக நலத்திற்கேற்ற தன்மைகளை மன்னரும் முறையே தத்தம் கடமைகளென மேற்கொண்டொழுகி னர். இருவர் மனமும் கெழுமிய அன்புக் கயிற்றினும் பிணிக்கப்பட்டது. இருநிலம் பிளக்க வேர் வீழ்க்கும் மரம் போன்று இக்கேண்மையும் இருவர் நெஞ்சிலும் ஊன்றிப் பதிந்தது போலும்!

## 7. மகளிர் தோற்றம்

புலமையில் மிக்க புலவரின் கூட்டுறவையும் பண்பிற் சிறந்த மனைவியாரின் துணையையும் பெற்ற வேள் பாரியாருக்குக் குறை வேறொன்றுமிலது என உலகோர் இயம்புமாறு அருந்ததியன்ன பெண் மகவுகள் இரண்டு ஒன்றின்பின் ஒன்றாகத் தோன்றின. குடிகள் உவகைக்கடலில் மூழ்கி னார்கள். எங்கும் மங்கல ஓசை முழங்கிற்று. அந்தணர் ஆசி கூறினர். இரவலர் பொன் பெற்று மகிழ்ந்தனர். அரண் மனை மங்கலப் பொருள்களால் அலங்கரிக்கப்பட்டது. அவ்வின்பச் செய்தியை அப்போதைக்கப்போது தம்மிடம் வந்தியம்பிய பணியாளருக்குச் சிறந்த பரிசில்களை அரசர் ஈந்தனர். தொட்டிலிடல், பேரிடல் முதலிய சிறப்புகள் அக்குழவிகளுக்கு முறையே நடைபெற்றன. அக்குழவி கள் அங்கவை சங்கவையென்னும் பெயர்களைப் பெற்றன.

அப்பெண் குழவிகள் தவழுந்தோறும் இயற்கை வனப்பு வாய்ந்த அவர்கள் முகம் அழகுடன் மிளிர்ந்தன.

அவர்கள் நெற்றியில் கட்டியிருந்த சுட்டி அசைந்து பிர காசித்தது. அஃது அக்குழவிகள் இயற்கையழகுகளின் திறந் தெரிந்து கவி பாடிச் செயற்கைத் தன்மைகளையும் அதில் திகழச் செய்வன என்பதைக் காட்டுவது போலி ருந்தது. காலில் அணிந்த தங்கச் சிலம்புகள் ஒலி செய்ய அச்சிறுமியர் குறு நடை நடந்தனர். அஃது அம்மகளிர் பிற்காலத்தில் பாடப்போகும் கவிகளின் இனிய ஓசையை வெளிப்படுத்தல் போன்றிருந்தது. அவர் தம் வளைகள் அணிந்த கைகளால் சுவரை ஆதரவாகப் பற்றி நடந்தனர். அப்போது ஓரிடத்திலிருந்து மற்றோரிடத்திற்கு அவர் தம் கரங்களைப் பெயர்த்து வைத்தது பின்பு அவர்கள் அசை சீர்களை எண்ணிக் கவியியற்றப் போவதைத் தெரிவித்தது. குழலினும் யாழினும் இனிமை தோன்ற அவர்கள் கொஞ் சிக் கொஞ்சிப் பேசின பேச்சுகள் பொருள் நிறைந்த வையாயிருந்தன. அவை, 'இச்சிறுமிகளின் வாய் மிக்க பயன் பெற்ற கவிகளையே இயம்பும்,' என்பதைக் காட்டின.

இவற்றைக்கண்ட பெற்றோரும் கபிலரும் மகிழ்ந்தனர். ஆனால், இருபாலார் மகிழ்வும் ஒரு தன்மைப்பட்டனவல்ல. பெற்றோரின்பம் தம் பிள்ளைகள் என்ற உரிமையையும், அவர்கள் செய்யும் செய்கைகளின் மேற் போக்குகளையுமே சார்ந்திருந்தது. கபிலரின் களிப்போ, அத்தொடர்பைப் பற்றியதன்று. அவர், மக்கள் உடலமைப்புகளையும் முக ஒளியையும் கண்டு, அவர்களுடைய கால வாழ்க்கையை வரையறுத்துச் சொல்லும் அறிஞர் கூட்டத்தில் சார்ந்தவ ரல்லரோ! அத்தகைய அவர் நோக்கம் கேவலம் மேல் விளை யாட்டுகளால் கவர்ச்சியுறுமோ! காண்போர், 'இவரும் நம்மைப் போன்றுதான் இம்மகளிர் செய்கைகளில் மயங்கி

உள்ளார்,' எனக் கருதலும் கூடும். அது மிக்க தவறு. அவர் அச்சிறுமியரின் அவயவக் கூறுபாடுகளையும், செய்கைகளை யும் ஊன்றி ஊன்றி நோக்கினர். அடக்கமும், பொறுமை யும், கற்பும், புலமையும் அவர்களை அணுகி அழகு பெறும் என்பது அவருக்குத் தோன்றிற்று. அதை நினைக்குந் தோறும் அவர் நெஞ்சம் புளகித்தது. ஆனால், சில துன்பங் களும் அவர்களுக்குநேரும் என்பதை அவர் அறியாமலில்லை. அஃது அவரைச் சிறிது வருத்திற்று. ஆயினும், அம்மகளி ரின் நல்லமைப்புகள் அவற்றை ஒருவாறு நீக்கி நன்மையை அளிக்கும் என்ற எண்ணம் அவர் வருத்தத்தைத் துடைத் தது. இங்ஙனம் கற்றோரும் மற்றோரும் மகிழ வளர்ந்த அம்மகளிர், நாளுக்கு நாள் நலம் பெற்று விளங்கினர்.

நற்குணங்கள் பலவற்றிலும் பாங்குற்று, ஈகையும் இயல்பாக வாய்க்கப் பெற்று, கற்பிற் சிறந்த இல்லக்கிழத் தியாரையும் ஏற்றுப் பாரியார் மேன்மை அடைந்தனர். அஃதன்றியும் அவர் கபிலரின் அறிவுரை நீரினால் வளரும் மனத்தளிரையுமுடையவர். அத்தகையாருக்குப் பிறந்த பெண் மக்கள் நற்சால்புகள் பலவும் வாய்ந்திருந்தார்கள் எனக் கூறலும் வேண்டுமோ!

அச்சிறுமியருக்கு இயற்கையாகவே நல்லமைப்புகள் பல அமைந்திருந்தன. அன்னார் அழகில் திருமகளென விளங்கினர். அவர்கள் வளர்ப்பும் மிக்க சீர்மை பெற் றிருந்தது. தாய்தந்தையர்களின் ஒற்றுமையும், ஒழுக்க மும், அறிவுமே அம்மக்களின் நடக்கையைப் பண்படுத் தின. புலவராகிய கபிலரின் கூட்டுறவும் அவர்களுக்குத் துணையமைந்தது. தாயினால் அவர்கள் மன நிலத்திலே விதைக்கப்பட்ட நல்லறிவு விதைகள் தந்தையார் பாய்ச்சிய

அறிவு அரிவையர்க்கும் உரித்து என்பதே அவர்கள் கோட்பாடு. கேவலம் சொத்துரிமை மாத்திரமன்றி, அரசுரிமையிலும் பெண்கள் ஆட்சி சென்றது. அரசவை, நீதி மன்றம், பொது அவை, புலவர் கூட்டம், சங்க மன்றம் முதலிய பல இடங்களிலும் மகளிர் பங்கு பெற்றுத் திகழ்ந்தனர். சான்றோர், அரசர், கற்றோர் யாவருடைய மதிப்பும் அவர்கள் மாட்டு ஊன்றியிருந்தது. அவர்கள் நுட்ப மதி பலரையும் வியக்கச் செய்தது. சான்றோர் அக மகிழப் பேசுதல், கற்றோர் வியப்புற எழுதுதல், இயற்கை வளம் திகழக் கவியியற்றல் முதலியன அவர்களுக்கு எளியவை என்னுமாறு அமைந்திருந்தன. அந்தக் கால தேவதை, மங்கையரின் மனமகிழ்வைப் பெற்றிருந்தது. காலமும் மங்கையரும் கலந்து உறவாடினர். ஒவ்வொரு விநாடியும் அஃது அவர்களுக்கு உத்தம அறிவை ஊட்டியது. ஒவ்வொரு நாளும், ஒவ்வொரு திங்களும், ஒவ்வொரு வருடமும் மகளிர் அறிவில் உயர்ந்துகொண்டே வந்தனர். அடிமை வாழ்வு அவர்கள் அருகிலும் அணுகிலது. இதனால் அவர்கள் நெஞ்சம் என்றும் ஆநந்தத்தில் தவழ்ந்துகொண்டிருந்தது.

இங்ஙனம் பெண்கள் கல்வியிலும், அறிவிலும், செல்வத்திலும் உயர்ந்து நிற்பினும், தங்கள் இல்லறக் கடமைகளையோ, தங்கள் கணவரின் கட்டளைகளையோ, மக்கள் வளர்ப்புகளையோ, மறந்தார்களில்லை. இவ்வாறு பெண்களை அறிவிலும், கடமையிலும் ஊக்கிவிட்டது நம் பழந் தமிழ் நாடே. என்ன காரணத்தினால் இடைக் காலத்தில் இவை யாவும் தலை சாய்ந்து இக்கீழ் நிலைமையை அடைந்தனவோ, யாம் அறியோம். இன்று பெண்கள் மாட்டு

நம் நாட்டின் எண்ணம் இருக்கிறதெப்படி? எந்நிலைமையில் அவர்களை வைத்துள்ளார்கள்? இதுகாறும் கூறியவற்றிற்கு மாறுபட்ட நிலைமையிலல்லவா? 'பெண்டிருக்கு அடிமைத்தனமே அரசாட்சி! காற்றில்லாச் சிறு வீடே சுவர்க்கம்!' என்றன்றோ வரையறுத்துள்ளனர்! என்ன காரணத்தினால் இந்நிலை நம் தமிழ் நாட்டிற் புகுந்ததோ, அறியோம். பழந்தமிழ் நாடு பெண் மக்களை வளர்த்த பண்பும், இப்போதிருக்கும் நிலைமையும் ஊன்றி நோக்கும் சான்றோர் எங்ஙனம் வருந்தாமலிருக்க முடியும்? அக்காலத்தின் தன்மை எப்போது நம் நாட்டில் நுழையுமோ, உணரோம்.

அங்கவை சங்கவை ஆகிய சகோதரியர் இருவரும் ஆசிரியர் கபிலரிடம் ஊக்கத்துடன் கல்வி கற்றனர். ஆசிரியர் செப்புவதைக் கேட்குங்கால அவர்தம் மனம் அசைவற்ற நீர் நிலையெனவிருந்தது. நம் பாரி மகளிர் ஒவ்வொருவரிடமும் அன்பு பாராட்டினர். அவர்தம் இனிய சொற்களும், பணிந்த நடையும் யாவருக்கும் இன்பத்தை ஊட்டின. அவர்கள் தங்கள் தாய்தந்தையரிடம் நடந்துகொண்டமுறை மற்றையோருக்குமுன் மாதிரியாக இருந்தது. அம்மங்கையர், பணியாளர், சுற்றத்தார், பெற்றோர், கபிலர் முதலியவரிடம் பேசுங்கால் கருணையையும், நகைச் சுவையையும், அன்பையும், பணிவையும் முறையே வெளிப்படுத்துவர். அவர்கள் முகத்தில் என்றும் இன்பமே தவழும்; பிறர் கேட்டவற்றிற்கு ஆராயாது விடை அளித்தலை அவர்கள் எப்போதும் மேற்கொண்டதில்லை.

கடுஞ்சொற்களுக்கும் அவர்களுக்கும் காத தூரம், அரச மகளிராதலின் பணியாளர், தோழியர், சுற்றத்தார்,

நேர்கிதர் முதலியோர் இடையே அன்னார் வாழ வேண்டி இருந்தது. இவர்களுள் ஒவ்வொருவருக்கும் நம் மகளிர் கண்ணுள் மணியெனத் திகழ்ந்தனர். யாவர் அன்பும் மதிப்பும் அவர்கள் மாட்டுப் பதிந்தன. இத்தன்மையில் தம்மைச் சூழ்ந்திருப்பவர்களுக்கு ஏற்படும் குற்றங் குறை களைத் தீர்க்கும் பொறுப்பு மகளிரைச் சார்ந்தது.

அவ்வமயங்களில் அம்மங்கையர் மேற்கொண்ட பொறுமைக்கும் ஆராய்ச்சிக்கும், தவசியையும் நீதிபதி யையும் ஒப்புக் கூறலும் இயலாது. ஒவ்வொருவர் விஷ யங்களையும் தனித்தனியே கேட்டு மனத்திருத்துவர்; பின் அவற்றைத் தம் மனத் துலையில் வைத்துச் சீர்தூக்குவர்; இறுதியில் நிறையின்படி முடிவு கட்டுவர். ஒரு பொரு ளின் வனப்பையும் மதிப்பையும் கொண்டே நல்லதென வரையறுத்தல் அறிவுடைமையாகாது. 'எந்தப் பொருளை எத்தகையோரிடமிருந்து கேட்பினும், அதை உணராது தீர்மானித்தல் பெருந்தன்மையன்று,' என்பன அவர்கள் நன்குணர்ந்தனவாகும். குற்றத்திற்கேற்பத் தண்டனை விதித் தலில் அவர்கள் கொண்ட முயற்சி பெரிது. செப்ப முடைமை அவர்களிடம் செவ்வனே அமைந்திருந்தது. நாட்டின் நியாயப் பொறுப்புத் தந்தையரையும் அரண் மனையின் நீதி முறை மகளிரையும் பற்றி நின்றன. இத் தகைய விஷயங்களில் தாயாருக்கிருந்த பெரும்பாரங் களை மகளிர் இறக்கிவிட்டனர் எனக் கூறல் மிகையாகாது. பெற்றோர் தளர்ச்சியை ஊன்று கோலெனத் தாங்கி, அவர்க்கு உரமளிக்கின்றவர்களல்லவா மக்களெனப்படு வார்கள்? பெற்றோர் அன்பு மகளிரிடமும், மகளிரின் பக்தி பெற்றோரிடமும் குடி புகுந்தன. அவரவர் தத்தம் கடமை

களிற் பிறழ்ந்திலர். 'நம் பெரியோர் இயற்றிய தவமே இவர் நமக்கு மக்களெனத் தோன்றினதற்குக் காரணம்,' என்பது பெற்றோர் எண்ணம். 'நம் முற்பிறவியின் புண்ணியமே நமக்கு இக்கருணை வள்ளல் பெற்றோராய் வாய்ந்ததற்குக் காரணம்,' என்பது மகளிரின் கருத்து.

இங்ஙனம் இரு சார்பினரும் உவகை வண்டியேறி ஊர்ந்துகொண்டிருந்தனர். அம்மகளிரின் அழகும், அடக்கமும் தாயாரை மகிழ்வித்தன; ஊன்றிய கல்வியும், உயர்ந்த அறிவும் தந்தையாரை உவப்பித்தன. ஒற்றுமையும் உபசாரமும் உறவினரின் உரிமையைத் திரட்டின; குணமும் மாண்பும் குடிகளுக்குக் குதூகலத்தை அளித்தன; சுறுசுறுப்பும், முயற்சியும், கூர்ந்த மதியும் கபிலரைக் களிக்கச் செய்தன. வள்ளல் தன்மையையே வாழ்வெனக் கொண்ட பாரியார் தம் மகளிரின் பண்புகளையும், உயர் மதியினையும் நினைந்து நினைந்து மகிழ்வர்; "பேறுகள் பல உண்டு எனக் கூறினும், மக்கட் பேற்றைக்காட்டிலும் சிறந்தது ஒன்றுண்டோ! அதினும், அறிவறிந்த மக்களாயின், வேறு இயம்பலும் வேண்டுமோ! இம்மகளிரே நம்மைக்காட்டிலும் சிறந்தவர். இவர்களிடமன்றோ உலகம் அதிக அன்பைச் செலுத்துகின்றது! இதனாலேயே நம் மகளிரின் அருமைத் திறன்கள் நன்கு விளங்குகின்றன அல்லவா? எல்லாம் கபிலரின் கருணையேயாகும். அவர், இவர்கள் அறிவு வளர்ச்சியில் மனம் செலுத்தவில்லையேல், இவர்கள் மேன்மை அடைய முடியுமா! அன்றி, யான்தான் பெருமையையும் மகிழ்வையும் எய்த இயலுமா! எல்லாம் கடவுள் செயல்! அவன் அவரவர்களுக்கு ஏற்ற செயலை

நடு நிலைமையுடன் புரிகின்றான். அவ்விருவருக்கும் என் வணக்கம் உரித்து. இங்ஙனமே என் மகளிரின் வாழ்நாட்கள் பீடுடன் கழிய எல்லாம் வல்ல இறைவனை யான் இறைஞ்சுகின்றேன்,'' என்று தமக்குள் நினைந்து மகிழ்வர்.

கபிலர் அவர்களுக்குச் சிறந்த பல நூல்களைப் போதித்து வந்தனர். தாம் போதிக்கும் பொருள்களை அங்ஙனமே கவரும் அப்பெண் மகளிரின் புத்திக் கூர்மை ஆசிரியரை ஆனந்தத்திலாழ்த்தியது. அம்மங்கையர் விஷயங்களைச் சித்திரப் பாவையென அமைவுறக்கேட்டு மனத்தி லிருத்துவர்; உண்டதை அசையிடும் ஆவெனப் பின்பு அவைகளைச் சிறிது சிறிதாக நினைவிற்குக் கொணர்ந்து சிந்திப்பர். ஒருவரை ஒருவர் வினவிக்கொள்ளுதலும் ஒருவர்க்கொருவர் விடையளித்தலும் உண்டு. அம்மங்கை யர் எடுத்த காரியத்தில் பெரிதும் ஊன்றி நின்றனர்; உண்ணல், உடுத்தல், உறங்கல், விளையாடல் இவற்றைக் குறித்த காலத்தில் நிகழ்த்துவர். மற்றப் போதில் ஓர் இம்மியையும் வீணில் கழிக்க அவர் மனம் இசைந்திலது. பயனற்ற செய்கையிலோ வார்த்தைகளிலோ காலங்கழிக்க அவர்கள் ஒருப்படுதலில்லை. அங்ஙனம் கழியும் சிறு போதும் பெரும்போதாகத் தோன்றி அவர்களை வருத்தும். ஆசிரியர் புகன்ற ஒவ்வொன்றையும் ஊன்றி ஊன்றிப் படிப் பர்; நீரைப் பிரித்துப் பாலைப் பருகும் அன்னமெனப் பயனற்ற பொருளை ஒழித்துப் பயனுடையவற்றையே மனங்கொள்வர்.

இவ்வாறு அம்மங்கையர் அறிவு செப்பமுடையவன் ஆக்கம் போன்று நாளுக்கு நாள் வளர்ந்துகொண்டே

வந்தது. முயற்சி தன் மெய் வருத்தக் கூலி தருமன்றோ! முயற்சியுடையார்க்கு இகழ்ச்சி உண்டோ! ஆகவே, அவர்கள் மேற்கொண்ட பெருமுயற்சி அவர்களைப் பெரும்புலமைச் செல்விகள் ஆக்கியது. அதை அறிந்த இருமுது குரவரும், கபிலரும் மகிழ்வெய்தினர். கபிலரின் உவகை கடலினும் பரந்தது. அவர் அம்மக்களிடம் மிக்க அன்புபாராட்டினர்: அவர்களைத் தம் சொந்த மகளிரெனவே கருதினர். அப்பெண் மணிகளின் ஞான நீரே தம் கீர்த்திப்பயிர் ஓங்குதற்குக் காரணம் என்பது அவர் எண்ணம். அம்மங்கையரின் கூர்ந்த மதியை உணர்ந்தோர் யாவரும் கபிலர்க்கே வாழ்த்துக் கூறினர். ஆசிரியரின் ஞான முதிர்ச்சியன்றோ மாணவர்களின் அறிவைக் கூர்மைப்படுத்துவது! அப்பெண் மணிகளின் கல்வியறிவும், பேசுந்திறனும் கபிலருடைய ஞானப்பொன்னின் மாற்றறிதற்கு ஓர் உரை கல்லென உள்ளது எனச் சான்றோர் இயம்பினர். அவர்களுக்குக் கவி பாடுந்திறனும் உண்டு. இயற்கையழகும், கடவுளியல்பும், உலக முறையும் அவர்கள் கவிகளில் ததும்பி நிற்கும்.

ஒரு சித்திரக்காரன் பல கருவிகளைக் கொண்டு பன்னாளும் முயன்று முயன்று சிறிது அழகு தோன்ற வரையக்கூடிய மலர் வனம் ஒன்றை அவர் தம் கவிகளில் சிறிது போழ்தில் அழகு முழுதும் தோன்றச் சித்திரித்துக் காட்டுவர். அது மனக்கண் கொண்டு காண்போர் உள்ளத்தை வியப்பினாலும் இன்பத்தினாலும் கட்டுப்படுத்தும். ஐம்புலன்களையும் அடக்க வன்மையற்று அலைப்புண்டுழங்கும் சிலரையும் ஒரு வழிப்படுத்தற்கு அக்கவிகள் சிறந்த கருவி என்னலாம். அவை மனத்தின்

கண் தோன்றும் உவகைப் பேழையைத் திறக்கச் சிறந்த திறவுகோலெனவும் விளங்கின. இயற்கை அழகோடு பல மங்கல அணிகளையும் அணிந்து இலங்கும் கற்புடை மணிகளே மான, அவை இலக்கண அமைப்புடன் பல அணிகளையும் பெற்றுப் பொலிந்தன. அவற்றைக் கண்ணுற்ற புலவர் பெரிதும் புகழ்ந்தனர். இங்ஙனம் அப்பெண் மணிகள் பெற்றோரின் அன்பையும், ஆசிரியரின் ஆசியையும் பெற்றுத் திகழ்ந்தார்கள். கல்வியின் கண்ணியமும் அறிவின் மாட்சியும் அவருக்குரியவையாயிருந்தன. சான்றோரின் நன்மதிப்பு அவரைச் சார்ந்தது. இத்தன்மையுடன் நம் மகளிர் இருவரும் யாதோர் இன்னலுமின்றி வாழ்ந்து வந்தனர்.

மக்களில் குணசாலிகள் புத்திசாலிகள் என இரு திறத்தினர் உண்டு. புத்தியிற் சிறந்த ஒருவருக்கு நற்குணமின்றேல் உலகம் அவரைப் புகழ்வதில்லை; அத்துடனில்லாமல் அவரை இகழவுஞ் செய்கின்றது. நற்குணங்களைப் பெற்ற ஒருவர் அறிவில் சிறிது குறைவுபட்டிருப்பினும், 'அவர் சிறந்த குணவந்தர். அவர் நற்குணங்களில் மற்றையோர் சிலவற்றைக் கடன் கொள்ள வேண்டும். அவர் புண்ணியம் வாய்ந்தவர்,' என உலகம் போற்றக் காண்கின்றோம். இதனால் எத்தகைய அறிவு மாட்சி இருப்பினும் நற்குணமின்றேல், பயனின்று என்பதை உணர்கின்றோம். ஒருவரிடம் நிறைந்த குணமும், சிறந்த அறிவும் அமைந்திருத்தல் சிறிது கடினமே. அங்ஙனமிருப்பின், பொன் மலர் நாற்றம் பெற்றதைப் போன்று மிக்க சிறப்புடையதாகும். இவ்விரண்டும் ஒன்றிற்கொன்று சிறிது குறைவுபட்டிருப்பினும் குற்றமில்லை. இது நிற்க.

பலவற்றிலும் உயர் நிலையில் நின்ற நம் பாரி மகளிர்க்குக் கல்வியறிவுகளுடன் குண நலனும் பொருந்தியிருந்தது. சகோதரியர் இருவரும் ஒத்த பண்பும், ஒத்த நலனும், ஒத்த அறிவும் பெற்றுத் திகழ்ந்தனர். ஒருவரை விட்டொருவர் பிரிய அவர் மனம் இசைந்திலது. ஒரு விஷயத்தில் ஒருவருக்குக் குறை நேருங்கால் இன்னொருவர் அதை நிரப்புவர். அவர்தம் ஒத்த வாழ்வு யாவருக்கும் வியப்பை அளித்தது. அவர்களுக்கு இயற்கையிலமைந்திருந்த உடன் பிறப்புரிமையுடன் நட்புரிமையும் பொருந்தியிருந்தது. கல்வி நலன் அந்நட்பை நாளுக்கு நாள் வளர்த்ததென்பது மிகையாகாது. 'கல்விக்கிருவர்,' என்றவாறு நூல்களாகிய ஆழியின் ஆழத்தில் மிளிரும் முத்துகளாகிய உயர் பொருள்களின் இன்பந் துய்க்க இருவர் சேர்ந்திருத்தல் இன்றியமையாததன்றோ! அறிவு வளர்தற்கும் அக்கூட்டுறவே காரணம் என்பதை மறுப்பவர் யார்!

அன்றியும் நுட்பப் பொருள்களை ஆய்தலிலும், வாதம் புரிதலிலும், தெளிதலிலுமே அவர்கள் காலங் கழிந்தது. தெளிந்த கல்வியாளர் இருவர் ஓரிடத்தில் அமர்ந்து நூல் நுட்பங்களை ஆராய்ந்து புதிய கருத்துகளைக் காணல், அவற்றைப் பன்முறை சிந்தித்துத் தெளிதல் முதலியவற்றைக்காட்டிலும் இவ்வுலகில் இன்பம் வேறொன்றுண்டோ! இஃது ஏதோ ஒரு கால் நேரினும், சொல்லொணு இன்பத்தை ஈவதாகும். அத்தகைய பேரின்பம் அச்சோதரிகளுக்கு நாளும் கிடைத்தது. இருவரும் ஒரே அரண்மனையில் வதியும் செல்வச் சகோதரிமாரல்லரோ! அவர்கள் இன்ப வாழ்விற்கு இந்திரன் வாழ்வும்

குறைவுபட்டதெனவே கூறல் வேண்டும். நிறைந்த செல்வமும், பரந்த கல்வியும் வாய்ந்த சகோதரிமார் இருவரும் கல்வித் தெப்பத்திலேறி அறிவாழியில் மிதந்துகொண்டிருந்தனர்.

## 8. பாரி மகளிரும் இயற்கையும்

அம்மங்கையர் பெரும்பாலும் ஒழிவு நேரத்தைத் தம் அரண்மனையைச் சூழ்ந்த தோட்டத்திலேயே கழிப்பர். அவர் பந்தாடும் இடமுமுண்டு. கந்துகத்தைக் கரத்தில் தாங்கிச் சிறிது நேரம் விளையாடுவர். ஆங்கு அமைந்துள்ள பளிங்கு மேடை அவர்தம் நெஞ்சைக் கவரும். அதன்மீதிருந்து சிறிது நேரம் பற்பல விஷயங்களைக் குறித்துப் பேசுவர். இயற்கையழகும், குளிர்ந்த காற்றும், நீரோடையின் இழுமெனும் ஒலியும் அவர்களைக் குதுகலிக்கச் செய்யும். தாய்ப்பறவைகள் தங்கள் குஞ்சுகளுக்கு உணவூட்டும் காட்சி அவர்கள் உள்ளத்தை உருக்கும். சில மரங்களில் இலைகள் இவையென்றும், பறவைகள் இவையென்றும் வேறுபாடு தோன்றாது. சில பறவைகள் புஷ்பங்களின் நிறத்தைப் போன்றே இருக்கும். 'கொடிய வேடுவர்களிடமிருந்து தப்பிப் பிழைக்கவே இப்பறவைகளுக்கு இந்நிறத்தை இறைவன் தந்தனன் போலும்!' என அம்மங்கையர் தீர்மானித்தனர். மரங்களிலுள்ள கனிகள் பலவற்றை ஒதுக்கிச் சிலவற்றை மாத்திரம் பறவைகள் கொத்தித் தின்றன. அது பயனற்றவைகளை நீக்கிப் பயன் தரும் நூல்களையே ஆராயும் அறிவாளர் செயலெனக் காணப்பட்டது. புற்றரையிலும், குறுஞ்செடிகளிலும் அந்தந்த இலைகளுக்கும் கொம்பு

களுக்கும் தக்க நிறத்தைப் பெற்ற புழுக்கள் பல வதிந்து கொண்டிருந்தன. ஆதலின், 'இது புழு ; இது கொம்பு ; இஃது இலை,' எனக் காணற்கியலவில்லை. அஃது அவைகள் பகைவரிடமிருந்து தப்பித்துக்கொள்ள இறைவன் அளித்த ஒரு பெருவரமாகும். இவை அவர்களுக்குப் பெரு மகிழ்வையும், வியப்பையும் அளித்தன. அவணிருந்த நீர் நிலையில் நீந்தி விளையாடுவதில் அவர்களுக்கு விருப்பம் அதிகம். இதனால் நீந்துதலும் அவர்களுக்குக் கைவந்திருந்தது.

இன்னும் அம்மகளிர் இயற்கை இன்பங்களைப் பெரிதும் கண்டு மகிழ யாம் முதலிற் குறிப்பித்த மலர்ச் சோலைக்குத் தம் தோழியருடன் போதல் உண்டு. ஆங்குள்ள ஒவ்வொன்றும் அவர்களுக்கு இன்பத்தை ஊட்டா நிற்கும். கல்வியறிவில் தேர்ச்சியற்ற சிலருக்குப் பயனற்றனவாகத் தோற்றும் பொருள்கள் பல அச்சகோதரிகள் உவகைக்கு உருவாகி நிற்கும். அன்னார் அவ்வியற்கைகளிலெல்லாம் இறைவன் திருவருளையும், திறத்தையும் நினைத்து நினைத்து உருகுவர். இதற்கு ஊன்று கோலாயிருந்தது அவர்கள் கபிலரிடம் கற்ற கல்வியேயாகும். அம்மகளிர் கேவலம் பொருளுக்கேனும், புகழுக்கேனும் கற்றவரல்லரே ! அங்ஙனமாயின், மேலோடு கற்று அவற்றின் பொருளை விரைவில் மறந்திருப்பர். தம் ஆர்வத்தினால் ஒவ்வொன்றையும் ஊன்றியூன்றிப் படித்து ஆய்ந்தவரல்லரோ அவ்வனிதையர் ! ஆதலின், அவற்றின் தத்துவங்கள் அவர் தம் மனத்தில் நன்கு வேரூன்றி இருந்தன.

அம்மங்கையர் இயற்கை அழகுகளைக் கண்டு மனமகிழுங்கால் பெரிய சகோதரியார் சிறிய சகோதரியாரை

நோக்கி, "என் அருங்குணத் தங்காய், பகலவன் வெப்பத்தினால் வருந்தி வாடிய தம்மை மழைத் துளி தந்து தளிர்க்கச் செய்த மேகத்திற்குக் காணிக்கை தருதல் போன்று தம் கிளைகளாகிய கைகளால் தூய மலர்களைத் தாங்கி நிற்கும் இம்மரங்களைப் பாராய்! தமிழ்ப் புலவர் ஒருவர் தம் மாணவருடன் ஈங்கு வருவரேல், இது தற்குறிப்பேற்ற அணிக்குத் தக்க உதாரணமென அவர்கள் மனத்தில் நன்கு பதியுமாறு விளக்கிக் காட்டியிருப்பர்.

"இயற்கை வனப்புகள் யாவும் ஒருங்கே திரண்டாலெனத் தோன்றும் இம்மஞ்ஞைச் சேவல் தன் அழகிய தோகையை விரித்தாடுவதை நோக்காய்! இதைக் கண்ட இவ்வான் கோழி அழகும் அடர்த்தியுமற்ற தன் தோகையை விரித்தாடலை எதற்கு உவமைப்படுத்தலாம்! பன்னூற்களை ஐயந்திரிபறக் கற்றவர் புனையும் கவிக்கும், கல்லாதவர் வெற்றுரைகளினால் நிரப்பும் பாட்டிற்கும் உள்ள வேறுபாடு இதில் உனக்குத் தோன்றவில்லையா! மலர்ந்து உதிரும் தென்னம்பாளைகளைக் கொக்கென அஞ்சி இத்தடாகத்திலுள்ள மீன்கள் ஓடி ஒளிந்துகொள்வதைப் பார்! இது போலி வீரர்களுக்கு அஞ்சியோடும் கோழை அரசன் செயலை ஒத்திருக்கிறது. வஞ்சனையற்ற சான்றோர் மனம் போன்று மணற் பாங்கில் அருவி நீர் தெளிந்து ஓடும் என எதிர் நிலை அணி தோன்ற நம் ஆசிரியர் விளக்கிய தன்மையை இந்நீர் வெளிப்படுத்துவதைக் காணாய்! இந்நாரை நீரில் துள்ளியோடும் சிறு மீன்கள் யாவையும் செல்லவிட்டு ஒரு பெருமீன் வருமளவும் யோகியைப் போன்று நடித்து நிற்கும் நிலையைப் பாராய்! கொடியாரைக் காண மனமின்றி மறைவிற்செல்லும் சான்

ரோரைப் போன்று மணலில் நுழைந்து மறையும் நண்டு களைப் பார்! ஆடை அணிகளைப் பூண்ட மங்கையரென மலர்ந்து நிற்கும் இப்பூங்கொம்புகளின் அழகு என்னே! இதனாற்றான் நம் நூல்கள் அழகிய பெண்ணை ஒரு பூங் கொம்பென உருவகப்படுத்துகின்றனபோலும்! வழிச்செல் வோரையும் தன்னிடம் அழைக்கும் தாழையின் மணமே மணம்! தம் செல்வம் தக்கோர் கொள்ள இன்புற்றிருக்கும் கருணைவள்ளல்களைப் போன்று கனிந்து நிற்கும் மரங்களின் மாண்பை நோக்காய்! தேனீக்கள் தாங்களும் உண்ணாது பிறர்க்குமீயாது துளித்துளியாகச் சேர்த்து வைத்த தேன் கூட்டை, வேடுவன் போந்து அழித்துத் தேன் எடுக்கின் றான் பார்! அஃது உண்ணாதும் உடுக்காதும் பிறர்க்களிக் காதும் திரட்டி வைத்த ஒருவர் பொருள் முழுவதையும் தீயோர் வந்து கொள்வதை ஒத்திருக்கின்றதன்றோ! 'ஈயார் தேட்டை தீயார் கொள்வர்.'

"வெடித்த மூங்கிலின் முத்தங்கள் மேல் நோக்கிச் சென்று உடுக்கூட்டமெனப் பொலிகின்றன. விஷயங்கள் பலவற்றிலும் உழன்று திரிதரினும் அவற்றில் சிறிதும் பற் றற்ற ஞானியர் நெஞ்சம் போன்று நீரிலேயே தோன்றி வளர்ந்து வதியும் இத்தாமரை இலைகள் நீரைச் சிறிதும் பற்றாமல் இருத்தலைக்காணாய்! பொருள்களை நன்கு ஆராய்ந் துணர்ந்த பெரியோர் தலை வணங்கி இருத்தல் போன்று நன்கு பழுத்த இந்நெற்கதிர்கள் தலை சாய்ந்துள்ளன. இடையிடையே முளைத்தெழுந்த தாமரையும் குமுதமும் பெண் மகளிரின் முகத்தையும், கண்களையும் ஒத்து மிளிர் கின்றன. இங்ஙனம் அழகு மிக இப்போது தளிர்த்துத் தோன்றும் இம்மரங்கள் இலையுதிர் காலத்தில் தங்கள்

இலைகளை முழுதும் உதிர்த்துவிட்டுப் பற்றை அற ஒழித்து நிற்கும் துறவிகள் போன்று காணப்படும். அது கால வேறுபாட்டினால் உண்டாகிறது. ஆயினும், இம்மாறுதல் எல்லா இடங்களிலும் ஒரே விதமாக ஏற்படுவதில்லை. ஒரு வகை மரமே ஒரு நாட்டில் பூத்துக் காய்க்கும்போது, மற்றொரு நாட்டில் இலை உதிர்த்து நிற்கும். இதற்குக் காரணம் அந்தந்தத் தேசத்தின் தட்ப வெப்பங்களேயாகும். இவை கோள்களின் சம்பந்தத்தினாலேயே உண்டாகின்றன. இதனால்தான் வானக் கோள்களுக்கும் நில உலக வாழ்க்கைக்கும் நெருங்கிய தொடர்பு உண்டு என வான சாஸ்திரிகள் செப்புகின்றார்கள். இரை தேட வெளிச்சென்ற பறவைகள் இம்மாலைப் போதில் தங்கள் கூட்டையும், மரக் கிளைகளையும் நாடி வருகின்றன. வந்தவை கிச்சுக்கிச்சென்று கத்துகின்றன பார்! அஃது அவைகள் காலையிலிருந்து செய்த காரியங்களை ஒன்றிற்கொன்று செப்பி மகிழ்வது போல உள்ளது. இவற்றை ஊன்றி நோக்குங்கால் பறவைகளும் தங்கள் இன்ப துன்பங்களைத் தங்கள் இனத்தினிடம் செப்பி மன ஆறுதலடைகின்றன என்பது தோன்றவில்லையா!"

இங்ஙனம் சகோதரிமார் இருவரும் சிறிது நேரம் இயற்கை இன்பங்களை அனுபவிப்பர்; அவற்றைச் செய்யுளில் அமைத்துப் பாடி மகிழ்வர்; தம் செய்யுளில் பொருத்தப் பொருளைத் தரும் மொழிகளையே அமைக்க முயல்வர். அவ்வழகிய வார்த்தைகளைக் கண்டு உவப்பர்; சில சொற்களைக் குறித்து வாதிடுவர்; சொற்கள் ஒன்றின் பின் ஒன்றாகத் தம் முன்னிலையில் வந்து நிற்பதை நோக்கி வியப்பர்; தமக்கு வேண்டும் சொற்களை வரவேற்று,

மற்றவற்றைத் தள்ளிவிடுவர்; இங்கு வரும் இன்பத்திற்குக் காரணம் தம் ஆசிரியர் கபிலரே என்னும் நினைவு அவர்களுக்குண்டாகும். உடனே அவருக்குத் தம் மனமார்ந்த வணக்கத்தைச் செலுத்துவர்; பின் தம் முன்னேற்றத்திற்கு முதற் கருவியும் துணைக் கருவியுமாய் இருந்த இறையையும், தம் தந்தையரையும் நெஞ்சார வாழ்த்துவர். இங்ஙனம் மிகுந்த நேரத்தை அவண் கழித்துப் பின் வீடு செல்ல அவர் நெஞ்சு கருதும். உடனே தோழிகளைத் திரும்பிப் பார்ப்பர். ஆங்காங்கு இயற்கை இன்பங்களில் திளைத்து விளையாடிக்கொண்டிருந்த தோழியர் விரைந்து வந்து அவர்களைச் சேர்வர். யாவரும் ஒருங்கு கூடி அரண்மனையை அணுகுவர். இங்ஙனம் நம் மகளிரின் காலம் இன்பத்தில் தவழ்ந்துகொண்டிருந்தது.

நாம் ஈண்டு நோக்கத் தக்கன சில உண்டு: நம் பழந் தமிழ் இருந்த இருப்பென்ன! அக்கால மகளிர் உயரிய கல்வி கற்றற்குத் தகுதியற்றவர் எனக் கருதப்பட்டிலர். அவரை அறிவற்றவர் என உலகோர் அகற்றிலர். கல்வி உரிமை ஆண் மக்களுக்கிருந்தது போன்றே பெண் மக்களுக்கும் இருந்தது. அவ்வுரிமை அவரை இன்பக் கடலில் ஆழ்த்தியது. கரை கடந்த துக்க வெள்ளத்தில் அலைப்புண்டவர் ஆறுதல் பெறுதற்குக் கல்வித் தெப்பம் இன்றியமையாததாகும். அஃது அவருக்கு நட்பினராகவும், உடன் பிறந்தாராகவும், பெற்றோராகவும், பெரியோராகவும் நின்று உதவும்; குற்றக் குழியில் விழுங்கால் ஊன்று கோலெனத் துணை புரியும்; இம்மை மறுமைச் செல்வங்களை அளிக்கும்; விளக்கென அஞ்ஞான இருளை நீக்கும்; நீதி நெறியைக் காட்டும்; வேண்டுவோர்க்குச் செப்ப

முடைய செல்வத்தை ஈயும்; நல்லோருறவையும், சான்றோர் மதிப்பையும் கூட்டும்; எங்கும் கீர்த்தியை நாட்டும்; நற்குணங்கள் பலவற்றையும் உருவாக்கும்; புலாலுடம்பு மாயினும், புகழுடம்பை நிலை நிறுத்தும். இத்தகைய பெருஞ்சிறப்புகள் பலவும் கல்வியினாற் பெறக்கூடுமன்றோ! ஆதலின், இவை இருபாலார்க்கும் இன்றியமையாதன என்பதை மறுப்பவர் யாவர்! இவற்றைச் சிறிதும் ஓராது பெண் கல்வியைத் தடுப்பவர் தற்காலத்திலும் உளர். ஈதென்ன கொடுமை!

ஆனால், கல்வி கற்றவர்களிற் சிற்சிலர் நீதியற்ற முறைகளில் இருத்தலும் கூடும். அது, தகுதியற்ற கல்வி, குறை கல்வி, மூடத்தன்மை, இயல்பு முதலியவற்றால் நேருவதேயன்றிக் கல்வியினாலன்று. இம்முறையிலிருக்கின்ற எத்தனை ஆண்மக்களை நாம் காணவில்லை! அவர்கள் கல்வியைக் குறைவுபடுத்துகின்றோமா! ஆண் மக்களைப் போன்றே பெண் மக்களுக்கும் பொருளீட்டுதற்கேற்ற கல்விதான் வேண்டும் என நாம் கூற வந்தோமில்லை. அறிவு நூற்கல்வியுடன் அஃதும் இருப்பினும் குற்றமில்லை. அறிவைப் பண்படுத்தக் கூடியதும், தேசத்திற்கும் ஒழுக்கத்திற்கும் பொருந்தியதுமான கல்வியை நம் பெண் மக்களுக்குப் போதிப்பின், இக்குறைகள் நேர இடமிராது. எப்பொருளிலும், குணமும் குற்றமும் கலந்தேயுள்ளன என்பது அறிவோர் அறியாததன்று. ஆனால், குற்றங்களைக்காட்டிலும் குணங்கள் பெரிதுமுடைய விஷயங்களைச் சான்றோர் மேற்கொள்ளுவர். கல்வியும் அவ்வகுப்பிற் சார்ந்த ஒன்றே. ஆதலின், நன்மைகள் பல ஈயத்தக்க கல்வியைப் பெண் மக்களுக்குத் தருதலே அறி

வுடைமை. நம் பழந்தமிழ் நாட்டினர், இக்குறையை நன் குணர்ந்து, பெண் மணிகளை முன்னேறச் செய்தனர் என் பதற்குப் பாரி மகளிரே தக்க சான்றுவர்.

ஒருவர் இன்பத்திலேயே திளைத்திருக்க இவ்வுலக இயற்கை இடந் தராதன்றே! நன்மையாளரேயாயினும், தீமையாளரேயாயினும், இயற்கைக்கு இடந் தந்தேயாக வேண்டும். இம்முறையில் அம்மகளிர்க்கும் துன்பம் நெருங் குங் காலம் அணுகியது. வேள் பாரியார் சிற்றரசரே ஆயி னும், அவர் வள்ளற்றன்மை எங்கும் பரந்திருந்ததென முன்னரே கூறியுள்ளோம். மலரினால் மணமும், குணத்தி னால் குலமும், அடக்கத்தினால் கல்வியும் மேன்மையுறுதல் கண் கூடு. அங்ஙனமே பாரியாரின் கொடைத் திறத்தினால் அவர் கீர்த்திக்காற்று எங்கும் வீசிற்று. குலமும் குண மும், இல் மாண்பும், மக்களன்பும், புலமையும், புலவர் நட்பும், கொடையும் ஆகிய எல்லா நன்மைகளும் சேர்ந்து அவரைச் சீர்மைப்படுத்தின. அவ்வமயம் அவரை உண ராதார் ஒருவருமிலரெனவே கூறலாம். பாரியாரையும் அவர்தம் மகளிரையும் பற்றியே எங்கும் புகழ் மொழிகள் புகலப்பட்டு வந்தன.

நம் மங்கையர் நூலறிவினும், கவியியற்றலினும், நற் பண்புகளினும் தலைசான்றவரென மூவேந்தரும் உணர்ந்த னர். அம்மங்கையரின் அறிவு மாட்சி, கல்வித் திறம், சீல முறை முதலியன அம்மன்னரின் மனத்தைக் கவர்ந் தன. பாரியாரின் ஈகையும், சகோதரிகளின் நலனும் சேர்ந்து மன்னரைப் பறம்பு நாட்டிற்கு ஈர்த்தன. எனவே, அம்மூவரும் தனித்தனியே அரசரிடம் போந்து அம் மகளிரைத் தமக்கு மணமுடிக்க வேண்டினர்.

பெருந்தகைமை, கருணை, வள்ளற்றன்மைகளையே தமக்கு உயிரெனக் கருதிய பாரி மன்னர், கேவலம் அரச செல்வத்தையும், அழகையும், ஆண்மையையும் மாத்திரம் பொருளென மதிப்பரோ! இவற்றுள் ஒன்றும் அவருக்கு இன்பம் அளித்திலது. "பிறரிடத்துக் காட்டும் அருள் அன்றோ ஆன்மாக்களுக்கு அணியெனக் கூறப்படும்! தாம் உண்பதும், உடுப்பதும், இன்பங்களைத் துய்ப்பதுந்தான் பிறந்ததன் பயன் எனக் கருதும் மக்களின் அறியாமை என்னே! இம்முறையில் மிருகங்களுக்கும் மக்களுக்கும் உள்ள வேறுபாடு யாது! மக்களுக்கு இறைவன் ஈந்துள்ள தனிப்பட்ட பகுத்தறிவின் பெற்றி தான் என்னை! துயரத்திலேலோ, மெலிவினுலேலோ, வறுமையினுலேலோ இன்னலுறும் உயிர்களுக்கன்றோ மக்கள் பெற்ற வளங்கள் பயன் படுதல் வேண்டும்! கல்வி அறிவு, உடல் வன்மை, செல்வம் இவற்றைக் கூடிய மட்டும் உதவி நிற்றலன்றோ வள்ளன்மை எனச் செப்புவது! பிறர் துன்பமடைந்து இளைக்குங்கால் புரியும் உதவியே சிறந்ததென்பதை மறுப்பவர் யார்! காலத்தில் செய்த உதவி சிறிதேனும் இப்புவியைக் காட்டிலும் மிகப் பெரிதன்றோ! இன்ன நற்குணங்களில் இம்மன்னர் பெற்றிருப்பவை யாவை? ஒன்றேனும் இவரிடம் இருப்பதாக நமக்குத் தோன்றவில்லை. தந்நலத்தைப் பாராட்டும் தகைமையாளரே இவர். பிறர் நன்மையையே பேணும் பெருந்தகையாளர்க்கும், இவர்களுக்கும் மிக்க வேறுபாடு உண்டு. செல்வமும், போர்த்திறமுமே இவர்களை அழகுபடுத்துகின்றன. அடக்கத்தையும் அன்பையும் பூண்டு எளிய வாழ்க்கையை நடத்தும் மேன்மக்கள் இவர்கள் எளனத்திற்கு இடமாவார்கள்.

நம் மகளிரோ, அன்புப் பாலையும் அடக்கச் சிற்றுண்டியையும் அருந்தி, ஈகைத் தொட்டிலில் வளர்ந்தவர். நற்குணக்கொழுந்தாகும் கபிலரோ, இவருக்குக் கல்வி நீர் பாய்ச்சிக் கேள்வி எருவிட்டு அறிவும் ஒழுக்கமும் நிறைந்த கதிரை முதிரச் செய்தனர். சிற்சிலர் நம் நலத்தைப் பெரிதெனை மதிக்கலாம். ஆயினும், நம் மகளிர் பெற்றியை நோக்குங்கால் நம் பண்பு ஆதித்தன் முன் மின்மினியே ஆகும். நம் இயல்புகளையும் நம் மகளிர் இயல்புகளையும் ஊன்றி நோக்கும் சான்றோர்க்கு இது புலனாகாமல் இராது. அரச முறையையும், ஈகை இயல்பையும் நம்மைக்காட்டிலும் நம் மகளிர் அதிகம் உணர்ந்துள்ளனரெனவே கூறல் வேண்டும். இத்துணைச் சிறந்த மகளிர் தோன்றியதற்குக் காரணம் நம் குலம் செய்த தவப்பயனேயாகும். அக்குல நலத்தைக் குறைக்க வழி தேடுதல் நமக்கு நலமன்று.

பெண் மகளிருக்கேற்ற நாயகரைத் தேடுதல் அவர் தமை ஈன்ற தந்தையரின் கடமையன்றோ! மென்மையும், கல்வியும், அழகும், பண்பும் அடைவே வாய்க்கப்பெற்ற பூங்கொடிகளை அவ்வியல்பிற்கேற்ற வன்கொம்புகளின் மேற்படரவிடவில்லையேல், அக்கொடிகள் யாங்ஙனம் நன் மலர்களை ஈந்து குலத்தை விளக்கும்! அக்கொடிகள் அழகிழந்து நசிப்பதற்கன்றோ அது வழியாகும்! ஆதலின், எத்தனை நாட்கள் செல்லினும், பூங்கொடி போன்ற நம் மகளிரை நல்லரசுக் கொம்புகளிடத்திலேயே படரச் செய்ய முயற்சிகள் செய்தல் வேண்டும். நம் ஆயுள் மட்டும் இவ்வுறுதியை விட நம்மால் இயலாது. இன்றேல் நம் அருமைப் பெண் மணிகள் மனப்பொருத்தமற்ற மண

வ்ரளரோடு கூடி அவர்கள் உயிருள்ளளவும் துன்பக் கடலி லன்றே ஆழ நேரிடும்! அத்துன்ப ஆழியிலிருந்து அவர் கள் கரையேறல் யாங்ஙனம்! அவ்வமயம் மகளிர், தந்தை யாகிய நம்மையன்றே நோவர்! மனம் நொந்து அவர் கள் கூறும் வார்த்தை ஒவ்வொன்றும் நமக்குச் சாப மொழியாகுமே! அது நமக்குக் கேடு விளைத்தல் திண் ணம். ஒரு கால் அவரவர்கள் ஊழின்படியே நடைபெற லாம். ஆயினும், முயற்சியும் இன்றியமையாத தன்றே! தந்தையின் கடமையை நாம் இயற்றாமல் அவர் கள் விதியைப் பழிப்பதில் பயன் யாது! பலர் ஆள் வினைக் கேற்ற அமைப்பைப் பெறலை யாம் கண்டதும் கேட்டதும் இல்லையா! தெய்வ அருள் கை கூடவில்லையேனும், முயற்சி பயனைத் தராமலிராதன்றே! தன்னைத்தான் உயர்த்து பவனும், தாழ்த்துபவனும் தானே என்பது ஒரு பழ மொழி. ‘நாம் முயற்சி செய்யின், தெய்வ அருளும் வந்து கூடும்,’ எனப் பெரியோர் புகல்வர்.

“இம்மூவேந்தருக்கு நம் மகளிரைக் கொடுக்க மறுக் கில், இவர்கள் நம்மாட்டுப் பகை பாராட்டுதல் திண்ணம். அதனால் சிற்சில கலகங்களும், போரும் நேரினும் நேரும். வேந்தர் மூவரும் ஒருங்கு சேர்ந்து நம் மலை நாட்டை முற்றுகையிட்டு நம்மை வருத்தினும் வருத்தலாம். அங் ஙனம் போர் நிகழுங்கால் வெற்றியும் தோல்வியும் ஒரு வரைப் பொறுத்தவையல்ல. அவை இறைவனருளையும் நம் வினையையும் சார்ந்தவை. அஃதன்றியும், அப்போரில் நம் வாழ்க்கை முடியினும் முடியும். எங்ஙனமாயினும், ஆகுக. இவற்றை முன்னிட்டு நம் அருஞ்செல்விகளின் வாழ்க்கையைக் கெடுக்க ஒரு நாளும் யாம் ஒருப்படல்

அடாது. இது நம் உயிருள்ளளவும் நடைபெறுது என்பது உண்மை,'' எனத் தீர்மானித்து, மூவேந்தரில் எவருக்கும் தம் மகளிரை மணம் முடிக்க இயலாதென மறுத்து விட்டனர். இதனுல், வேள் பாரியார் கருதிய வண்ணமே வேந்தர் மூவரும் அழுக்காறும் சினமும் கொண்டு, போருக்குக் கிளம்பினர்.

ஈண்டு நம் வள்ளற் பெருமானுகிய பாரியாரையும் தமிழ் நாட்டின் சிறப்பையும் இயம்பாமல் மேற் செல்ல மனமெழவில்லை. செல்வம் அழியினும், பகை நேரினும், வாழ் நாள் முடியினும் தம் மகளிர் இன்ப வாழ்வைத் துன்ப வாழ்வாக்கப் பாரியார் விரும்பவில்லை. இம்மறுப்பினுல் தமக்கு வரப்போகும் இன்னல்களையும் அவர் அறியாமலில்லை. மகளிரின் நன்மையில் பதிந்து நின்ற அவர் மணம் தம் சுய நலத்தை நாடிற்றிலது. நம் தமிழ் நாட்டு வள்ளல்களின் பெருந்தகைமை என்னே ! கேவலம் செல்வத்தையும், வீரத்தையும், உறவையும் கருதிற்றிலது நம் தமிழ் நாடு. கொடியரும், அறிவீனரும், தந்நலத்தினருமான ஆடவர் கடற்பெருக்கில், பொறுமையும், நுண்ணறிவும், பிறர் நன்மையிலே கருத்தூன்றலும் வாய்ந்த பெண் மரக்கலங்களைக் கவிழ்த்தல் என்னும் பித்து அக்காலத்தில் மாந்தர் மனத்திற் குடி புகவில்லை போலும்! அதனுல் உண்டாகும் வறுமை, பிணி, துன்பம், கற்பழிவு முதலியன நம் தமிழரசர் மனத்தில் நன்கு வேரூன்றியிருந்தன. மகளிரின் மன ஆறுதலும், மகிழ்வுமே உலக வயலைக் காக்கும் வேலி. நற்பண்புகளும், தீயொழுக்கத்திற் செல்லாச் சீலமுமே அவ்வுலக வயலைச் செழிக்கச் செய்யும் நீர். பெண்ணின் நலமே நன்மக்கள் தோற்றத்திற்கு வாயில்.

மகளிரின் அறிவே தோன்றிய மக்கள் மாக்களாகா மைக்கு ஊன்றுகோல். உலகம் எரிந்து கரியாதற்கு மங்கையர் சிறு மன எரியே போதியதாகும். அவர்களே நாடு தொழும் தெய்வங்கள். தங்கள் வன்மை குறையினும் தம் பாலையூட்டியும், இரவு விழித்தும், மருந்தருந்தியும், பத்தியமிருந்தும் மக்களை வளர்க்கும் கடவுளர்கள் பெண் மக்களே. இத்துணைச் செம்மைகள் பலவும் அக்காலத் தமிழ் மக்கள் மனத்தில் நன்கு வேரூன்றி இருந்தன. அப்போதைய சீர்மைக்கு இஃது ஒரு சிறந்த சான்றாகும். பலவற்றிலும் பெற்றி வாய்ந்த மூவேந்தரையே பாரியார் எங்ஙனம் ஆய்ந்து ஆய்ந்து அளந்து பார்த்தார் என்பதை நோக்குக.

இப்பண்புகள் வாய்ந்த நம் தமிழ் நாடு எக்காரணம் பற்றி இக்கொடிய நிலைக்கு வந்ததோ நாம் அறியோம். 'பெண் கேவலம் அடிமை. அவளுக்கு அறிவுநூற் கல்வி யைப் போதித்தல் பயனற்றது. என்ன கேடு கெடினும், என்ன பாடு படினும், சொத்துரிமை அவளுக்குக் கிடை யாது. எந்த நல்விஷயங்களிலும் அவள் நுழைதல் கூடாது,' என்னும் கொள்கைகள் இப்போது நாட்டில் நடையாடுவதன் மூலம் யாதோ தோன்றவில்லை. இதனால் எத்துணை உத்தமப் பெண் இரத்தினங்கள் தங்களுக்கு இயற்கையாயுள்ள மகிழ்வையும் நல்வாழ்வையும் இழந்து, வாணாள் முழுதும் துக்கம் நிறைந்தவர்களாய்ப் பிறந்ததன் பயனை அடையாமலே முடிகின்றார்கள்! இதை நினைக்குங் கால் கன்னெஞ்சமும் கரைந்துருகும். நம் பழந்தமிழ் நாட்டின் நேர்மையையும், இப்போதுள்ள போக்கையும் ஊன்றி நோக்கும் சான்றோர் கண்ணீர் சிந்தாமலிருக்க

முடியாது. எப்போதுதான் பழந்தமிழ் நாட்டின் கொள்கை இப்புதிய தமிழ் நாட்டில் வந்து குடியேறப் போகின்றதோ! அறியோம்! அப்போதே நம் தமிழ்த் தாய் நல்லாடை நல்லணிகளைப் பெற்று துலங்குவள். அஃதொழிந்து தற்காலம் தமிழ் நாடு மிக்க நாகரிகத்தில் வளர்ந்துகொண்டு வருகின்றது எனக்கூறல் யாவும் வாய்ப் பறையே.

இங்ஙனம் வேள் பாரியார் தம் மகளிரைக் கொடுக்க மறுத்தது வேந்தர் மூவருக்கும் மிக்க சினத்தை மூட்டிற்று. "இச்சிற்றரசனுக்கு என்ன திரம்! இவன் நம் செல்வத்தையும், வீரத்தையும், தமிழ் நாட்டின்கண் உள்ள நம் செல்வாக்கையும் சிறிதுங் கருதிலன்! இவன் மகளிர் எவ்விதத்தில் நமக்குப் பொருத்தமுடையவர்! ஏதோ கல்வியிலும், குணங்களிலும், அறிவிலும் சிறிது நலம் பெற்றுள்ளனரே என்றல்லவோ நாம் நினைத்தோம்! நம் சம்பந்தத்தில் இவன் பெரிதும் மகிழ வேண்டுவதை விட்டு நம்மைப் புறக்கணித்தனனே! எதில் இவன் நமக்கு ஒப்பு என நினைத்தான்! இவன் மகளிரை நாம் விரும்பியவுடன் தன் நிலையை முற்றும் மறந்துவிட்டனன் போலும்! இவன் அறிவுடைமை நன்று நன்று! அஃது எங்ஙனம் தெரியும்! இவனை அலைத்து விட்டாலன்றி நம் வீரத்தையும், பெருமையையும் இவன் உணரான்! இதை அறியின் உலகம் என்ன நினைக்கும்! 'மூவேந்தர் பாரி மகளிரை மணக்க விரும்பினர். அதைப் பாரி மறுத்து விட்டான். அவ்வேந்தர்க்குத் தக்க வன்மையும், குல மாண்பும், குணநலனும் இருந்தால் பாரி இங்ஙனம் செய்வானா! தன் மகளிர்க்கு நன்மையுண்டாவதை எத்தந்தை

தான் தள்ளுவான்! அதினும் பாரி தன் மகளிரை ஆண் மக்களைப் போன்று வளர்க்கின்றான்! அவர்தம் பேரறிவையும், பெண்மைக் குணங்களையும், சீலச் சிறப்பையும் ஒருவர் இருவரன்றி உலகம் முற்றுமன்றோ போற்றுகின்றது! தன் மகளிரின் தூய்மைக்கு மூவேந்தரில் ஒருவரும் தகுதியுள்ளவரல்லர் எனக் கருதியே மறுத்திருப்பான்! இன்றேல் இங்ஙனம் நடைபெறுமா! தானோ, சிற்றரசன். மகளிரை மணக்கக் கருதியவரோ, மூவேந்தர்! தன்னைக் காட்டிலும் உயர்விடத்தில் தன் மகளிரை மணம் முடிக்க வேண்டுமென்பது அவன் கருத்து எனப் பலர்கூறக் கேட்கின்றோம். இம்முறையில் ஏற்பட்ட இந்தத் தொடர்பை விட அவன் மனம் விழையுமா! வலியவரும் திருமகளைக் காலாலுதைத்துத் தள்ளுவதும் உண்டா! இல்லை. இல்லை. இதில் ஏதோ ஓர் இரகசியம் உள்ளது! இன்றேல், இவ் வார்த்தையைக்கேட்ட இவ்வேந்தரும் வாய் பேசாமல் இருப்பாரோ! தங்கள் மாட்டு யாதொரு குற்றமும் இன்றேல், இவர்கள் இங்ஙனம் இருத்தற்குக் காரணம் என்ன! அதை நம்மால் உரைக்க முடியவில்லை. பாரியின் மனத் திட்பமே திட்பம்! என்ன வீரம்! என்ன வீரம்! மூவேந்தருக்கும் சிறிதும் அஞ்சாது மறுத்துவிட்டனனே! இங்ஙனமன்றோ இருத்தல் வேண்டும்!' எனப் பல படப் பகர்ந்து நம்மை எள்ளலும் பாரியைப் புகழலும் செய்யுமன்றோ! கபிலர்தாம் எத்தகையர்! 'அவர் சான்றோர்; புலவர்; பாரிக்கு உயிர் நட்பினர்,' எனப் பலர் கூறுகின்றனரே! இதற்குச் சான்றுதான் யாது! தம்மைக் காத்தோர் காரியங்களில் வழுக்கிய காலத்தில் வகைப் படுத்துதலன்றோ சான்றோர் மரபு! பிற்கால வாழ்க்கை

யின் பெருமையை அரிய நட்பினருக்கு உணர்த்துவ தல்லவா புலவர் கடமை! சமயமறிந்து உதவியைப் புரித லன்றோ நட்பினர் முறை! அங்ஙனமின்றி அவன் போன போக்கே விட்டிருக்கின்ற அவரும் ஓர் அறிவாளரோ! அவன் அழிவைக் கருதாது செயலாற்றும் அவர் ஓர் உண்மை நட்பினராவரா! அவருக்கும் நம் தன்மைகள் தெரியவில்லை போலும்!

“அம்மங்கையர்தாம் எத்தகையினர்! யாதோ கல்வி யில் தேர்ந்தவரென்றும், கூர்ந்த மதி வாய்ந்தவரென்றும், உலகம் சாற்றுகின்றதே! என்ன கல்வி! என்ன மதி! தம் வாழ்க்கை நலத்தைக் கருதாத அறிவும் ஓர் அறி வாமா! தந்தை சொன்னால்தான் என்ன! கல்வியறிவில் கரை போய அம்மகளிர் உண்மையை உரைத்துத் தந் தைக்குப் புத்தி புகட்டலாகாதோ? அவர்கள் யோசித்துப் பார்த்தாலென்ன! அவ்வளவு தூரம் அவர்களுக்கு எட்ட வில்லை போலும்! பின்னால் இவ்வறியாமையைக் குறித்து அவர்களே வருந்துவார்கள். அந்தோ! அரசன் கொண்ட மூடத்தனமும், கபிலர் கண் மூடித்தனமும் இளம்பெண் களையன்றோ கெடுக்கப்போகின்றன! படித்த பெண்களும் இங்ஙனம் ஆராய்ச்சி அறுவர்களோ! அவர்களைக் குற்றங் கூறுவதில் பயனென்ன! தந்தையறிவு மக்களறிவு. பேதை மையென்பது மாதர்க்கணிகலம். ‘எண்ணறக்கற்று எழுத் தற வாசிக்கினும் பெண் புத்தி பின் புத்தி.’ இவைக ளல்லவோ அவர்களைத் தொடர்ந்து நிற்கின்றன. எங் ஙனமேனும் இக்குடும்பத்தினருக்கு நல்லறிவைப் போதித் தலே நலம். ஆயினும், நல் வகையில் எத்துணை இயம்பி னும் அப்பாரியின் தலையில் இப்போது ஒன்றும் ஏறாது.

நம் வன்மையை அவனுக்குக் காட்டியே தீரவேண்டும். இப்போது அவனுடன் போருக்குச் செல்வதே தகுதி,'' எனத் தீர்மானித்தனர்.

“அங்ஙனமிராது. அவர்கள் நுட்ப மதி வாய்ந்தவர்களே. தந்தையின் எண்ணத்திற்கு மாறுபட்டு நடத்தல் பெண்களுக்கு அழகன்று என்பதே அவர்கள் எண்ணமாயிருக்கும். இம்முறையினுங்கூட அவர்கள் நுண்ணறிவு உடையவர்களே. எத்தனை பெண்கள் தாய் தந்தையரை மறுத்துத் தாங்கள் விரும்பியவரை மணக்கவில்லை! இஃது உலகப் பழிப்பிற்குக் காரணமாகுமென நினைத்தனர் போலும்! எங்ஙனமேனும் அப்பெருந்தகை மடந்தையரை வாழ்க்கைத் துணைவியராகக் கொள்ளும் புண்ணியம் நமக்கு வாய்த்திலது என்றுதான் பகரல் வேண்டும்,'' என்று எண்ணினர்.

உடனே மூவேந்தரும் ஒருங்கு சேர்ந்து, வேள் பாரியாருக்கு உரிய பறம்பு மலையரணை முற்றுகை இட்டனர். அது பாரியாருக்குத் தெரிந்தது. அதன் காரணம் இன்னதென அவருக்கு விளங்கிற்று. அவர் கண்கள் சிவந்தன. புருவம் நெற்றிமேற் சென்றது. “இவர் மூவரும் என் தோள் வன்மையும், வாள் வன்மையும் உணர்ந்திலர் போலும்! பகைவரால் தகர்க்க முடியாத என் அரண் சிறப்பை இவர்கள் இதுகாறும் உணராதது வியப்பினும் வியப்பே! இவர்கள் பெருந்தன்மை இருந்தவாறு என்னே! மகளிரைக் கொள்ளல் ஆவணத் தெருவில் பண்டமாற்றுச் செய்தலையொத்தது எனக் கருதினர் போலும்! பெற்றோரும் பிள்ளைகளும் மனமிணங்கிச் செய்தலே மணம் தரும் மணமென்பதை இவர் அறியாரோ!

பிறர் வற்புறுத்துதலினால் நடைபெறும் விவாகம் தகுதி உடையதன்று ; அவரவர் மனப்பான்மையையும், சுதந்த ரத்தையும் சார்ந்தது என்பதை ஏன் இவர் உணர்ந்திலர் ! தெளிவிற் சிறந்த என் மகளிர் ஆரவாரத்தன்மை வாய்ந்த இவர்களை விரும்பார் என்ற உணர்ச்சி இவர்களுக்கில் லையே ! இவர்கள் மதியும் வீரமும் என்னே ! ஒருவர் பெண் கொடுக்க மறுத்தபோது வாளா செல்லுதலன்றோ அறிவுடைமை ! அதைப் பலரும் அறியுமாறு வெளிப் படுத்தல் என்ன பேதைமை ! அங்ஙனம் மனமின்றி ஏற் பட்ட வாழ்க்கைதான் இவர்களுக்கு என்ன நலத்தை அளிக்கப் போகின்றது ! ஆழ்ந்த ஆராய்ச்சி அற்ற இவர் என்னவாயினுஞ் செய்க. அதன் பொருட்டு யான் சிறி தும் கவலேன்!" எனக் கூறிய பாரியார் அரணைக் காக் கத் தக்க காவலை ஏற்படுத்தி, தாமும் போருக்கேற்ற ஆடை அணிந்து, வில்லும்வேலும் வாளும் தாங்கி, மதிலைக் காவல் செய்து மனக் கலக்கமற்றிருந்தனர்.

மூவேந்தரோ, அரணை விட்டு நகர்ந்திலர். "எங்ஙன மேனும் இதைக் கைப்பற்றியே பின் செல்ல வேண்டும்," என்பது அவர்கள் உறுதி. அரணுக்குள் வசதிகள் பலவும் உண்டு என்பதை மூவரும் நன்கு உணர்ந்திலர். "நாம் முன்னறிவிப்பு இன்றியே வந்துள்ளோம். சிற்சில பகலிலேயே உள்ளிருக்கும் மக்கள் உணவின்றி வருந்து தல் கூடும். பாரியின் உறுதியும், கபிலரின் புலமையும் எத்தனை நாட்களுக்குத்தான் நிற்கும் ! அவை உணவு, உடை முதலியவற்றை அளிக்குமோ ! பின்பு அவ்விரு வரும் தாமாகவே நம்மைப் பணிவர்," எனக் கருதினர். ஆனால், அவர்தம் எண்ணம் உடனே கை கூடிற்றிலது.

குடிகளுக்கு வேண்டிய உணவுப் பொருள்கள் அரணி லேயே கிடைத்தன. ஆதலின், சில மாதங்கள் வரையும் யாதொரு பருவரலுமின்றி அவர்கள் சுகமாகவே காலங் கழித்தார்கள்.

பாரியாரின் நட்பினரும், நம் மகளிரின் ஆசிரியரு மாகிய கபிலர் சில கிளிகளை வளர்த்து வந்தனர் அவை கள் அவர் வாயிலாகச் செய்யுட்களையும், பேச்சுகளையும் கற்றிருந்தன. அரசரும், மகளிரும், கபிலரும் அவற்றால் அடைந்த ஆனந்தம் அளவிடற்பாலதன்று. அவர்கள் தளர்ச்சியடையும் காலங்களில் தங்கள் இன்னிசைச் சொற்களினால் அவர்களுக்கு ஊக்கத்தைப் பிறப்பித்து மகிழ்வையூட்டுவது அவற்றின் வழக்கம். அவற்றில் சில எப்போதும் நம் மகளிரைச் சூழ்ந்தே இருக்கும். அவற்றி னாலேயே அவர்தம் காலம் பெரிதும் இன்பமாகக் கழிந் தது எனக் கூறல் மிகையாகாது. அச்சுகங்களைக் கேவ லம் பாட்டிலும் பேச்சிலும் மாத்திரம் கபிலர் பழக்கி வைத்தாரில்லை; வெளியிடங்களிலுள்ள வயல்களுக்குச் சென்று நெற் கதிர்களைக் கொணர்தற்கும் அவை பழக்கப் பட்டிருந்தன. ஆனால், அதையே தொழிலாகக்கொண்டு பிறரை வருத்தக் கபிலர் மனஞ் சென்றிலது. செல்வக் குடியிற் பிறந்திருப்பினும் காலம் வாய்ந்துழி உதவ வீட் டுத் தூய்மை, சமையல், பிறரை உபசரித்தல் முதலிய வற்றில் தன் மகளிரைப் பழக்கி வைக்கும் அறிவுடைத் தாய்போன்று கபிலரும் பகைவர் சூழ்ந்தபோது வெளிப் பொருள் உள் வருதற்கேற்ற இவ்வுபாயத்தைக் கடைப் பிடித்தனர். அதற்கு அஞ்சுகங்கள் இலக்கியமாயிருந்தன. அரண் உள்ளிருந்த மக்களுக்கு அக்கிள்ளைகள் கொணர்ந்த நெற்கதிர்களே சில நாட்கள் உணவாக அமைந்தன.

சிறு பிராணிகளால் மக்கள் பெரும்பயனடையுமாறு செய்த கபிலரின் அறிவு மாட்சி என்னே! இம்முன் யோசனைக்கு அவர்க்கு என்ன பரிசு கொடுக்கலாம்! நண்பருக்கு வரும் துன்பம் தம்முடையதெனவே நினைக்கும் உரிமையே உரிமை! இத்தகைப் பெரியாரை நட்பினராகக் கொண்ட பாரியாரின் புண்ணியமன்றோ போற்றத் தக்கது! அவரை ஆசிரியராகப்பெற்ற நம் மகளிரின் பெருமையைப் பேசலும் வேண்டுமோ! பயனற்ற எப்பொருளைத்தான் பயன்படச் செய்ய அவரால் இயலாது! இஃது எத்துணைச் சிறந்த காரியம்! சான்றோர் பயனற்றுக் கழியும் நேரத்தையோ, விளையாட்டெனா நினைக்கும், வேலையையோ, அற்பமெனக்கருதும் ஜீவன்களையோ கொண்டு பிறர் வியக்கும் காரியங்கள் பலவற்றை முடித்துக்கொள்ளல் எக்காலத்திலும் உண்டு. இன்னும் பயனற்றதெனக் கருதும் நீர்வீழ்ச்சியைக்கொண்டு எத்துணைச் சிறந்த காரியங்கள் நடைபெறுகின்றன! அறிவுடையோர் செய்யும் சிறு காரியமும் பிற்கால வாழ்க்கைக்குப் பயனளிக்கத் தக்கதே ஆகும். பெரியார் செயற்கரிய செய்வரல்லரோ!

ஆயினும், அச்சுகங்கள் கொணர்ந்த அமுத உணவு எத்தனை நாட்களுக்குத்தான் மக்களை ஊட்டி வளர்க்கும்! தங்கள் அரணில் இருந்த உணவு பெரிதும் குறைவு பட்டது. பின் பறவைகள் கொணர்வதையே எதிர் நோக்க வேண்டி ஏற்படும் போல இருந்தது. அது போதியதாகுமா? அதைத் தெள்ளிதின் உணர்ந்த கபிலர், "பாரியின் வன்மையையும் அரணின் பெருமையையும் இயம்பியேனும் வேறு எவ்வகையிலேனும் இவ்வேந்தரை இவண்

விட்டு நீக்க நாம் முயலுதல்வேண்டும். அஃதே இப்போது செய்யவேண்டும் உபாயம். இன்றேல், இம்மன்னர் அரணை எத்தனை நாட்கள் சூழ்ந்திருப்பினும் பாரி பின்னிடான். அவன் உயிருள்ளளவும் இவ்வரணை இவர்கள் பற்ற இயலாது. வஞ்சனையால் வேண்டுமாயின் கெடுதி செய்யலாம். நீதி முறையில் இம்மன்னர் நினைத்த காரியம் ஒருபோதும் கை கூடாது. இஃது உண்மை. ஆனால், உணவுகுறையக் குறைய மக்களுக்குப் பெருந்துன்பமும், ஒருகால் மரணமும் ஏற்படும். இதுவும் பாரிக்கு மிக்க வருத்தத்தைத் தரத் தக்கதே. இங்ஙனம் இருபாலார்க்கும் பயனின்றித் தீமையை உண்டாக்கும் காரியத்தை நிறுத்திக்கொள்ளல் இம்மூவேந்தருக்கும் அறிவுடைமையே அன்றோ!” எனக் கருதி, மதிற் சுவரின்மீது நின்று, மூவேந்தரையும் நோக்கி, வேள் பாரியாரின் அரண் வளப்பம், உணவுப் பொருள் மிகுதி, போர்த்திறம் முதலியவற்றை விளக்கிக் கூற முற்பட்டனர். “நீவிர் மூவரும் ஒருங்கு சேர்ந்து போர் புரியினும், எத்தனை நாட்கள் முற்றுகை இட்டிருப்பினும் பறம்பைக் கொள்ளுதல் அரிதினும் அரிதே. இதற்குப் பாரியின்மன வன்மையே காரணம். ஆயினும், பறம்பின் மாட்டு மிக்க ஆர்வங் கொண்டு வந்த உமக்கு ஏதேனும் ஈந்தனுப்பலாமெனின், முந்நூறு ஊர்களையுடைய பறம்பு நாட்டைப் பரிசிலர் முன்னரே பெற்றுச் சென்றனர். ஆனால், இப்போது உம் விருப்பம் முற்றுப் பெறக் கருதுவீரேல், நீவிர் பாரியைப் பாடல் வேண்டும். இன்றேல், வடித்து முறுக்கப்பட்ட நரம்பினை உடைய சிறிய யாழை வாசித்துச் செல்லும் நறுமணம் பொருந்திய கூந்தல் வாய்ந்த விறலியர் பின் தொடர்ந்து

ஆடியும் பாடியும் வர, பாரியின்முன் செல்லுமின். அப்போது நீவிர் பறம்பு நாட்டையும், அரணையும், பாரியையும் பெற்றுச் செல்லலாம்,'' என இழிவு தோன்றப் பகர்ந்தனர்.

இஃது உண்மையே என்பதைத் தமிழரசர் நன்கு உணர்ந்தனர். ஆயினும், இவ்வார்த்தைகள் அரசர் மூவருக்கும் புண்ணில் புளி பெய்ததைப் போன்றிருந்தன. "யாம் இவன்மீது செற்றம் பாராட்டிப் போருக்கு வந்தது பேதைமையே! அறிவிற் சிறந்த கபிலரின் நட்பையும், ஒற்றுமையும் அன்பும் வாய்ந்த குடிகளின் துணையையும் பெற்று வாழும் இவனை வெல்லல் அரிதே. இவனே அன்றி இவன் குடிகளும் காலனையும் எதிர்த்து நிற்கும் வன்மை உடையவர்களே! யாம் இப்போரை நிறுத்தி வேறு சூழ்ச்சியினாற்றான் இவனை வெல்லல் வேண்டும்,'' எனக் கருதி மூவரும் ஒரு தனியிடத்திலிருந்து சிந்திக்கத் தொடங்கினர். அக்கால் ஓர் எண்ணம் அவர்தம் மனத்திற்றோன்றிற்று. பின்பு கபிலர் பகர்ந்தவாறே அரசர் மூவரும் வஞ்சகச் சூழ்ச்சியால் பரிசிலரைப் போன்று பாரியாரை அணுகி, அவரைக் காலன்பாலாக்கினர்.

இரவலர் இன்முகங் காணுமளவும் வரையாது ஈந்து உகக்கும் வள்ளலார் புகழுடம்பை நிறுத்திப் புலாலுடம்பை நீத்தனர். மண் மடந்தை மனமழுங்க, பரிசிலர் பதைபதைக்க, புலவர் பூமாரி பொழிய, விண்ணவர் வரவேற்க, பாரியார் பொன்னுலகடைந்தனர். அந்தோ! இது கொடுமையினும் கொடுமையே! கண்டோர் யாவரும் கதறினர்! அதை அறிந்த அரசியார் மனங் கொதித்தது. அவர் ஒன்றுந் தோன்றாது திகைத்தனர். அவர் கண்

இருண்டது; கை கால்கள் சோர்ந்தன. அவர் யாதோ கூறுதற்கு வாய் திறந்தனர். ஆனால், வார்த்தைகள் வெளி வந்தில; உடல் சோர்ந்து கீழே விழுந்தார். அருகி லிருந்த தோழிகள் செய்த உபசாரங்கள் பல. அவற்றுள் ஒன்றும் பயனளித்திலது. உடனே ஆருயிர் உடலி லிருந்து நீங்கிற்று! இவை யாவும் ஓர் இமைப் போதில் நடை பெற்றன! தோழியர் மெய்ம்மறந்து நின்றனர். அன்னார் தம்மைத்தாம் உணரவே சில நிமிடங்கள் வேண்டி இருந்தன. அரசியார் களைத்திருக்கின்றனர் என்பது சிலர் எண்ணம். அக்களைப்பை நீக்குதற்குத் தக்க காரி யங்கள் பல நடை பெற்றன. "இவை பயனற்றன. அரசி யார் எப்போதோ உயிர் துறந்தனர்," என மருத்துவர் இயம்பினர். இம்மொழி யாவர் மனத்தையும் கலக்கிற்று. அந்நாடு முழுதும் இதை உணர்ந்தது. "மூவேந்தரோ கள்ள வழியில் அரசருயிரைப் பறித்தனர். அரசருயிரோ, வஞ்சனை முறையில் அரசியார் ஆவியைப் பறித்தது போலும்! மாற்றரசர் கொண்ட கள்ளத்தனத்தையா நம் மன்னரும் கைக்கொள்ள வேண்டும்! எல்லாம் உணர்ந்த பண்பாளரல்லரோ பாரியார்! இவரும் இங்ஙனம் செய்ய லாமா! தம் இல்லக் கிழத்தியார்க்கு ஏன் இவர் தேறுதலை உண்டாக்கல் கூடாது! தம்முடன் தம் மனைவியாரையும் கூட்டிக்கொண்டால் அவர்களையே துணையாக நோக்கி இருந்த நம் கதி என்னாகுமென்பதை அவர் கருதிலர் போலும்! ஓ! பாரி மன்னரே! பகையரசர் கையில் ஒப்பு விக்கவா எம்மை உம்முயிர் போலப் பேணி வந்தீர்! ஐயோ! ஈதென்ன அநியாயம்! ஒருவர் இறக்கினும் மற்றொருவர் இருந்தேனும் எங்களைக் காக்கும் பாக்கியத்

தைப் பெற்றிலோமே! தாயை இழந்த கன்று போலவும், வேலியற்ற பயிர் போலவும் ஆதரவின்றி வருந்தவோ எங்களைச் சொந்த மக்களெனக் காத்தீர்! நாங்கள் இனி என்ன பாடு படுதல் வேண்டுமோ! உம்மைப் போன்ற அரசரைக் காண இயலுமோ! வேற்றரசர் ஆண்மை, ஆராய்ச்சி, அறிவு இவைகளில் உமக்கு ஒப்பு இருப்பினும் இருக்கலாம்! ஆனால், நீர் காட்டிய அன்பில் சிறிதளவு கூட அவர்கள் காட்ட முடியுமோ! அரும்பெறுன எம் அரசரை இழந்தது என்ன பாவமோ! எங்களைப் போன்ற பாக்கியசாலிகள் இவ்வுலகில் எவருமில்லை என்றன்றோ நாங்கள் நினைத்திருந்தோம்! எங்கள் ஆனந்தம் அழிந்ததே! கள்ளர் கையில் ஒப்புவித்தல் போன்று இக்கபடர் கையில் எங்களை ஒப்புவித்தீரே! இது கிடக்கட்டும். நாங்கள் எங்ஙனமேனும் ஆகிறோம். உம் அருமை நட்பினர் கபிலரையும் கை விட்டீரே! அவர் மனமகிழ்வையுங் கொள்ளை கொண்டு சென்றீரே! ஐயோ! அருமை மகளிரையும் ஆதரவறச் செய்தீரே! உம் உயிரென வளர்த்த அவரைப் பிரிந்து எங்ஙனம் உம் உடல் விழுந்தது! அவர்களை ஆண் மக்களினும் மேலாக வளர்த்து அவர்கட்குக் கல்வியையும் தந்தீரே! அவர்தம் கல்வி நலனைக் கண்ட நீர் கலியாண நலத்தைக் காணக் கொடுத்து வைக்கவில்லையே! தாயாரையுந் தந்தையாரையும் பிரிந்த அவ்வனிதையர் எங்ஙனம் தளருவர் என்பது உம் மனத்தில் தோன்றாமைக்குக் காரணம் யாதோ! உமக்கேற்ற ஆண்மகனிடம் அவர்களை ஒப்படைத்து நீர் சென்றிருந்தால் உலகம் இங்ஙனம் பரிதபிப்பதற்கு வழியிராதே!—அந்தோ! குழந்தைகளே, உம்மை நினைக்குந்தோறும் எங்கள் குடல் குமுறுகிறதே!

உம் தாய் தந்தையர் உம்மை வளர்த்த பெருமை என்ன! வைத்திருந்த நேர்த்தி என்ன! பால் கொட்டி வளர்க்கும் பயிரென வளர்த்தனரே! கல்விக்கண்ணையும், பகுத்தறிவுப் பார்வையையும் தந்தனரே! உம் அறிவிற்கேற்ற ஆண்மக்களைத் தேட இனி எங்களால் ஆகுமோ! அஃது அரசருக்கன்றோ எளிதில் முடியும்! இக்காரியம் முடிதற்கு முன் ஏன்தான் சென்றனரோ! உம்மை விட்டுச் செல்ல எங்ஙனம் அவருக்கு மனந் துணிந்ததோ! ஆவி செல்லினும், உம்மாட்டுண்டான அன்பு எங்ஙனம் அவர்களை நீங்கிச் செல்லும்!" எனக் குடிகள் எங்கும் கூடிக் கூடிப் புலம்பினார்கள்.

தம் உயிர் நண்பரான பாரியாரின் உயிர் நீக்கம் கபிலரைப் பெரிதும் வருத்திற்று. அவர் துயரம் அளவிடற்பாலதன்று. "அந்தோ! இது கொடிதினும் கொடிதே! பொறாமை என்னும் வாள் எதைத்தான் அறுக்காது! பாரியின் ஈகையினால் உண்டான புகழே அவனைக் கொலைக்குள்ளாக்கும் கூற்றுவனாயிற்றே! மகளிரின் பண்பன்றோ மன்னரை ஈங்கு ஈர்த்தது! இனி வறுமைவாய்ப்பட்டவர் யாரிடஞ் சென்று பொருள் பெறுவர்! புலவருக்குப் புகலிடம் ஏது! புலமையின் சீர்மை உணர்ந்து பொன்னளிக்கும் புரவலனும் இவ்வுலகிலுளனோ! அவன் கொடைக்குணமன்றோ அவன் நாட்டைச் செழிக்கச் செய்தது! அவன் அருட்குணத்தினாலன்றோ நெற் பயிர்கள் ஓங்கி வளர்ந்தன! அவன் கையிற்றாங்கிய கோலா அரசு நடத்தியது! அவன் இன்சொல்லும், இன்முகமும் அல்லவோ குடிகளை ஒற்றுமைப்படுத்தி அரசு செலுத்தின! இத்தகைய சிறந்த குணமுடைய நண்பன் ஒருவனை

இழந்தேனே ! ஆருயிர் நண்பனை இழந்த பின்னும், உயிர் வாழ்வார் உலகில் உண்டா ! ஐயோ ! என் உயிர் இன்னும் நீங்கிற்றிலதே ! இவ்வுயிர்க்கு இவ்வற்ப உடலின்மேல் எத் துணைப் பற்று ! எவ்வின்பத்தைக் கொண்டு இனி நான் உயிர் வாழ்வது ! உரிய அன்பனிலும் உயர் பொருள் வேறொன்றுண்டோ !" எனப் பலவாறு வருந்தி, ஆவி துறக்கக் கருதினர் ; ஆனால், பாரியாரின் வேண்டு கோளும், அவர்தம் மகளிரின் ஆதரவற்ற நிலைமையும் அவ்வெண்ணத்தினின்றும் அவரை வேறுபடுத்தின. "என் உயிர் நண்பனே, என்னை உயிர் துறத்தல் கூடா தென வற்புறுத்தியுள்ளான். அதை மறுத்து என் நலத்தை யான் பாராட்டி ஆவி நீப்பின், இவ்விரு மகளிர் போகும் வழி யாது ! இவர் பகையரசர் கைப்பட்டுப் பரிதபிப்பரே ! இவர்தம் மதிப்பும், சீர்மையும், பெண் ணலமும் குன்றுமே ! பெண்களைக் காத்தல் பெரியோர் கடமையன்றோ ! என் பிரிவு இவர்கள் மனத்தைப் பெரி தும் புண்படுத்துமே ! இவர்கள் பெற்றோர் இறந்ததற் கேனும் ஒரு காரணம் உண்டு. என் மரணத்திற்கு உலக மும், இம்மங்கையரும் என்ன காரணத்தைக் கருதுவர் ! தன்னலமென்றுதானே கொள்வர் ! வள்ளல் பாரியிடம் யான் கொண்ட நட்பும் அன்பும் பொய்ம்மையென்றன்றோ உலகம் கருதும் ! 'ஒரு நட்பினன் கடமையை முற்றுப் பெறச் செய்யாத இப்புலவரும் ஓர் அறிவுடையரா !' என உலகம் என்னை வெறுத்து நிந்தியாதோ ! துன்பம் நேருங் கால் இம்மங்கையர் என்னையன்றோ மனம் நொந்து தூஷிப் பர் ! இவ்வனிதையரின் அழகோ, யாவர் நெஞ்சையும் கவரத் தக்கது ! வயதோ, மங்கைப் பருவம் ! பண்போ,

பார்த்திபராலும் போற்றத் தக்கது! அறிவோ, புலவ ராலும் புகழப்படுவது! இன்னணம் சீர்மைகள் பலவும் வாய்ந்த இம்மங்கையர் கொழு கொம்பற்ற கொடி என்னத் தியங்குகின்றனர். ஓரறிவு வாய்ந்த முல்லைக் கொடிக்கும் மணித்தேர்ந்த வண்மையாளன் மக்களா இங்ஙனம் அல்லலுறுவது! ஆ! ஈதென்ன காலம்! இம்மக் கள் இங்ஙனம் துன்புறவும் நேர்ந்ததே! ஓ! ஈசா! இத் தத்துவத்தின் உண்மையை நீயன்றோ அறிவை! அற்ப மதியுடைய அடியேனால் தினையளவும் இஃது உன்னப் போமோ! சில சமயங்களில் நல்லோர் வருந்தலும், தீயோர் களித்தலும் உலக இயற்கையே!—இக்கற்புக் கொடிகளை நிறை கொம்புகளில் படரவைத்த பிறகே யான் கொண்ட தவம் ஒருவாறு முற்றுப் பெறும்; என் ஆவி யும் கவலையற்று நீங்கும்," எனத் தமக்குள்ளே பல நினைவு களைக் கொண்டனர். இது நிற்க.

அவ்வமயம் நம் அருமகளிரோ, அந்தப்புரத்தில் சித்திரிக்கப்பட்ட அழகிய மண்டபம் ஒன்றில் அமர்ந்திருந் தனர். அப்போது ஒரு சிறந்த விஷயத்தைப் பற்றிய ஆராய்ச்சி அவர்களிடையே நிகழ்ந்துகொண்டிருந்தது: "நம் கண்ணெதிரிலேயே வார்த்தையாடியும், நடந்தும், ஓடியும், விளையாடியும், காரியஞ் செய்தும் காலங் கடத் தும் மாந்தர் திடீரென இவ்வுலகை விட்டு நீங்குகின்ற னரே! அல்லும் பகலும் அன்புடன் பேணி வளர்த்த உடல் கீழே கிடக்க, ஆவி மாத்திரம் அந்தரத்தில் ஓடி மறைகின்றதே! அவ்வுயிரிருக்குமட்டும் அவ்வுடலிற்கு என்ன பெருமை! எத்துணைச் சீர்மை! எவ்வளவு பரா மரிப்பு! என்ன கவலை! இத்தனையும் ஓர் இமைப் போதில்

பறந்துவிடுகின்றன அல்லவா ! இஃது என்ன வியப்பு ! இத்துணைச் சிறப்புகள் யாவும் அணுவளவாய், எப்புலனுக்கும் எட்டாத ஆன்மாவிற்கன்றே நடைபெறுகின்றன! ஆனால், உண்மை உணராதார் இவை தேகத்திற்குத்தான் என்றன்றே கருதுகின்றனர் ! அங்ஙனமாயின், அவ்வான்மா நீங்கிய பின்னும் அத்தேகத்தைப் பாதுகாத்தல் வேண்டுமல்லவா ! அதன் பிறகு நெருங்கிய சுற்றத்தாரும் அவ்வுடலைச் சில மணி நேரத்திற்கேனும் வைத்திருக்க விரும்புவதில்லையே ! ஆனால், இதில் யோசிக்க வேண்டிய பகுதியும் ஒன்றுளது : தனிப்பட்ட ஆன்மாவினாலும் செயல் நடைபெறுவதில்லை ; தனிப்பட்ட உடலினாலும் பயனுண்டாவதில்லை. ஆதலின், இரண்டும் சேர்ந்தாலன்றி நன்மை பெறுதற்கியலாது என்பது திண்ணம். மாணிக்கத்தின் காரணமாக அஃதிருக்கும் பெட்டியைப் பேணுதல் போன்று, ஆன்மாவின் காரணமாகத் தேகத்தையும் நாம் கருத்துடன் பாதுகாக்கின்றோம். உடலிற்கும், உயிருக்கும் சிறிதும் சம்பந்தமில்லையேனும், உடலிற்கு உண்டாகும் நோயோ, வருத்தமோ எல்லாம் ஆன்மாவைத்தான் தாக்குகின்றன. உடல் உரம் பெற்றிருந்தாலொழிய, உயிருக்குப் பயனளிக்கும் காரியங்களைச் செய்யச் சிறிதும் இயலுவதில்லை. இம்முறையில் தொடர்பற்ற இவை ஒன்றிற்கொன்று எங்ஙனம் பந்தப்பட்டிருக்கின்றனவென்பது ஓர் ஆச்சரியமே ! இது நிற்க. இங்ஙனம் மிக்க தொடர்பு பெற்றிருந்த இரு பொருள்கள் ஒரு நாளைக்கு ஒன்றை விட்டு ஒன்று பிரிந்துவிடுகின்றனவல்லவா ! இஃது என்ன காரணத்தினால், எங்ஙனம் யாரால் நடைபெறுகின்றன என்பதையும் அறிய இயல

வில்லை! ஒரு துணி பழமையடைந்தால் கிழிந்து அழகு குறைதல் போன்று, நம் உடலும் வன்மை குறைந்தால் அதிலுள்ள ஆன்மப் பொருள் நீங்க வனப்பழிகிறது என்பது சிலர் சித்தாந்தம். இஃது எங்ஙனமாயினுமாகுக.

"நம் உடலைவிட்டுப்போகும் ஆன்மா எங்குச் செல்லுகிறது! என்னவாகிறது! மரணத்தின் பின் அதன் நிலைமையாது! இவற்றை நிச்சயமாகக் கூற முடியவில்லையே! ஆனால், பற்பலர் பற்பல விதமாகப் பகரக் கேட்கின்றோம். ஒருவர் கூற்றை நோக்குங்கால் அஃது உண்மைபோன்றே காணும். அப்போதே மற்றொருவர் கூற்றைக் காணுங்கால் முன்னது பயனற்றதாகத் தோன்றும். இங்ஙனம் மருட்சி ஏற்படுகின்றதே தவிர, ஒரு விதத் தெளிவும் உண்டாகிறதில்லை. அன்றி, இறந்த உயிர்களேனும் தங்கள் நிலைமையை நமக்குச் செப்பின், அறியலாம். இப்பொருளைப் பற்றிப் பன்முறையும் வாதாடுகின்றவரே உடலை நீத்த பிறகு இதைக் குறித்து நமக்கு ஒன்றும் தெளிவுபடுத்துவதில்லையே! ஈதன்றோ விந்தையினும் விந்தை! இம்மண்ணுலகில் நடைபெறும் சிறந்த காரியங்கள் பலவற்றினுள்ளும் ஈதே பெருவியப்பிற்குள்ளானது. நூல்களாலும், அநுபவத்தாலும் உணரவியலாத செய்கை இஃதொன்றே ஆகும். எத்தனையோ நவ நவமான பொருள்களைக் கண்டு களிக்கும் இவ்வுலகம், ஏனோ இதன் சார்பாக முயற்சியைக் கொண்டிலது! அதற்குக் காரணம் இம்முயற்சி பயன்விளியாது என்ற எண்ணமோ! அன்றி, இது மிக்க துன்பத்தை விளைக்கும் என்ற பயமோ! அதனால், பொருளீட்ட முடியாது என்ற கருத்தோ! அல்லது, 'இது கடவுளைப் பற்றியது; நாம் இதில் நுழைதல் கூடாது;'

என்ற பெருந்தன்மையோ! அறியோம்! இஃது உணர்ந்துகொள்ள வேண்டிய ஒரு விஷயந்தான். பொது வாக இது மக்களுக்குத் தெரியின், எவ்வளவு நலமளிக்கும்! அறிவுடையோர் இதனால் பெரும்பயனையும் அடையக் கூடும்,'' எனச் செப்பிச் சகோதரிமார் இருவரும் சிறிது நேரம் ஒன்றும் பேசாதிருந்தனர். யாதோ ஒரு பெரிய யோசனை அவர்கள் மனத்தில் உலாவுவது போல இருந்தது. "இதைக் குறித்து நமக்கு ஒன்றுமே புலப் படவில்லை. ஊன்றி நினைத்தால் தலை சுற்றுகிறதேயன்றி, முடிவு ஏற்படவில்லை. இஃது என்ன அறியாமை! புலமை வாய்ந்த எத்தனையோ பேர் வாளா விட்டிருக்கும் இதில் நாம் நுழைதல் அறிவுடையோர்க்கு நகைப்பை விளைவிக்கும். ஆனால், தெரியின் மிக்க சிறப்புத்தான்,'' என்று செப்பி, அப்பெரும்பொருளை ஒரு விதமாக முடித்தனர்.

இதுகாறும் ஒரு பெரிய விஷயத்தைப்பற்றிய ஆராய்ச்சி அவர்களுக்குள் நடைபெற்றமையின், அவர்களுக்குச் சிறிது இளைப்புத் தோன்றிற்று. ஆதலின், அவர்கள் அம்மண்டபத்தின் முற்றத்திற்கு வந்து வெளிப் புறத்திலுள்ள தோட்டத்தைச் சிறிது நேரம் நோக்கி விட்டு, அரண்மனை உள்ளிடத்தில் தங்கள் பார்வையைச் செலுத்தினார்கள்.

அவண், சிலர் விரைவாக நடந்துகொண்டும், என்னவோ வார்த்தைகளை இரகசியமாகப் பேசிக்கொண்டும், சிலர் மௌனக் குறிப்புகளைக் காட்டிக்கொண்டும் இருந்தனர். ஆனால், யாவர் முகத்திலும் துக்கமே குடிகொண்டிருந்தது. சிலர் உடல் நடுங்குவனபோலத் தோன்றின. மங்கையர் வதியும் மண்டபத்தைச் சிலர் கரங்கள் சுட்டிக்

காட்டின ; சிலர் வாய் அவர்களை நோக்கி நோக்கி முணு முணுத்தன ; சிலர் கண்களில் நீர் சொட்டியது. சிலர் தம் கைகளை நெரித்துக்கொண்டனர். மிக்க ஆபத்தான நிலையைச் சந்தித்தவை போல அவர்கள் கண்கள் காணப் பட்டன. சிலர் முகக் குறிப்பு, 'இனிப் பயனில்லை!' எனக் கூறுவது போன்றிருந்தது. சகோதரியர் இருவரும் சிறிது தூரத்திலிருந்தே இவற்றைக் கண்டனர். இதன் உண்மை ஒன்றும் அவர்களுக்குப் புலனாகவில்லை. யாரும் அவர்களுக்குச் சொல்வாருமில்லை. அரச மகளிர் தாமே சென்று கேட்டலும் பொருத்தமன்று. ஆனால், தாங்கலாற் றாத் துக்கம் ஒன்று அரண்மனையில் நிகழ்ந்துள்ளது என்பது மாத்திரம் பொதுவாக அவர்தமக்குப் புலனாகியது. "அஃது எதைப் பற்றியது? அதை அறிதல் யாங்ஙனம்? யாரைக் கேட்டுத் தெரிந்துகொள்ளலாம்?" என்பன அவர்களுக் குத் தோன்றவில்லை. அம்மங்கையர் தம்மைச் சுற்றிலும் நோக்கினர் ; மண்டபத்தை விட்டுத் தாம் வெளிவருங்கால் எப்போதும் தம்மைத் தொடர்ந்து வரும் தோழியரையும் அன்று கண்டிலர். பின்னும் பெரிய ஐயம் விளைந்தது. " என்ன! எல்லாம் புதியனவாய்க் காணப்படுகின்றனவே! என்றும் நிகழாக் காட்சி இன்று நிகழ்வதற்குக் காரணம் யாதோ! எங்கும் சிறு ஒலியும் கேட்கவில்லையே! பகைவர் படை எடுத்து வந்தனரோ! கொலு மண்டபத்தில் வாதங் கள் நடை பெறுகின்றனவோ! உயிர் நட்பு வாய்ந்த ஆசிரி யர் கபிலருக்கும் தந்தையாருக்கும் மனமாறுதல் ஏற்பட் டதோ! பகையரசர் நம் தந்தையாரைப் பழித்துக் கூறி னரோ! நம்மை மணக்க யாரேனும் வந்து நம் தந்தை யாருடன் வாதிக்கின்றனரோ! கபிலருக்குத் தேக சுகம்

இல்லையோ! தந்தையாருக்கு மனவருத்தம் ஏற்பட்டதோ!'' என்ற எண்ணங்கள் ஒன்றின் பின்னொன்றாக அவர் மனத்திற் குடி புகுந்தன. பின்பு சிறிது நேரம் யோசித்தனர். ஓர் எண்ணம் அவர்களுக்குத் தோன்றியது: "சரி; நம் அன்னையார் அரண்மனைக்குச் செல்வோம். அங்குத்தான் உண்மை வெளிப்படும். அவருக்குத் தெரியாத பொருள்களும் இருக்குமோ!'' எனத் தீர்மானித்தார்கள். இத்துணைக் கலக்கங்களும் அவர்கள் மன உறுதியை மாய்த்தில. விஷயத்தை உணர்வதற்கு முன் வேதனைக்குள்ளாதல் அறிவுடைமை அன்று என்பதை நம் அன்னையர் செய்கையிற் காட்டினர். குழப்பங்கள் பல நெஞ்சை உருக்கினும், அவர்தம் அறிவு நூல் ஆராய்ச்சி அவற்றில் தலையிட இடந் தந்திலது. 'விரைவில் விஷயத்தைத் தெரிந்து வேண்டுவதை இயற்றலே நம் கடமை,' எனக் கருதிக் கடுகிச் சென்றனர். ஆயினும், அவர்கள் தேகம் சிறிது தளர்ந்தும், முகம் வாடியும் இருந்தன. மங்கையாரின் தாள்கள் அன்னையாரை நோக்கி நடந்தன. அப்போக்கைக் கண்ட தோழியர், "அந்தோ! அந்தோ!'' என முணுமுணுத்தனர்! கையோடு கையை வைத்து அழுத்திக்கொண்டனர்! சிலர் கரங்கள் வயிற்றை நெருக்கிக்கொண்டன; கண்களை மறைத்தன; முகத்தை மூடிக்கொண்டன. சிலர் மறைவாகச் சென்றனர். ஆனால், சகோதரியாரின் கண்கள் இவற்றுள் எதையும் நோக்கில. அவர்தம் எண்ணம் முழுதும் தாயாரிடமே பதிந்திருந்தது. இமைப்போதில் சென்றடையும் அன்னையாரின் அரண்மனை அன்று நெடுந்தொலைவிலிருப்பதாக அவர்களுக்குத் தோன்றிற்று. "என்ன! நடக்க நடக்க வழி முடிய

வில்லையே! இன்னும் எவ்வளவு நேரந்தான் நாம் நடப்பது! கடவுள் இப்போது நமக்குச் சிறகை ஈந்தாலென்ன! அங்ஙனமாயின் ஒரே பாய்ச்சலில் போய் அன்னையாரை அடையலாமே! மக்களுக்கு நடத்தல், பறத்தல் ஆகிய இரு இயல்புகளையும் கடவுள் தந்திருப்பின், எத்துணை மேன்மை விளையும்!" என நினைத்துக்கொண்டே மாதாவின் மாளிகையை அணுகினர். அப்போதுதான் அவர்களுக்கு அதுகாறும் வாய்க்காத அனுபவம் ஏற்பட்டது. "நம் அன்னையாரின் நா எதை இயம்புமோ! நாம் எதைக் கேட்போமோ! அவர் எந்தத் துக்க நிலையிலிருக்கின்றனரோ! அவர் புன்னகை முகத்தைக் காண்போமோ! வருத்தத்தினுல் அவர் வாய், வார்த்தையாடாமலிருக்குமோ! அந்தோ! என்ன கவலை நம் மனத்தை வாட்டுகின்றது! இதைத் தாங்க நம்மால் இயலவில்லையே! இதனினும் இறத்தல் இனிதன்றோ!" என்ற எண்ணங்கள் அவர்களை மருளச்செய்தன. அதுகாறும் அவர்களுக்கிருந்த உறுதி தளர்ந்தது. அவர்தம் கால்கள் நடுங்கின; உடல் வெயர்த்தது; கைகள் அசைந்தன. மூத்த சகோதரியார் முன்னும், இளைய சகோதரியார் பின்னுமாக உட்புகுந்தனர்.

அவண் கவலைக் குறியுடன் கன்னியர் பலர் சூழ்ந்திருந்தனர். அரசியார் அவர்களுக்குப் புலப்படவில்லை. அன்னையாரைச் சூழ இத்தனை பேர் இருப்பதற்குக் காரணம் ஒன்றும் அவர்களுக்குத் தெரிந்திலது. அம்மகளிரின் வரவு ஆங்கிருந்தவரைத் திடுக்கிடச் செய்தது! அவர்கள் மனம் கொதித்தது. சத்தமிட்டழச் சிலர் தொடங்கினர்; சிலர் அதைத் தடுத்தனர். அச்சேடிகளின் கண்ணீர்

தரையை நனைத்தது. சிறிது நேரத்தில் அரசியாரைச் சூழ்ந்திருந்த கூட்டம் சிறிது சிறிதாக விலகிற்று.

ஒன்றுந் தோன்றாது தயங்கிய சகோதரிகளுக்கு ஒரு காட்சி காணப்பட்டது. அந்தோ! அக்காட்சி அவர்கள் கண்களை இருளச்செய்தது! அவ்வறையில் யார் இருக்கின்றனர் என்பதை அறிய அவர்களுக்கியலவில்லை. அவர்கள் உடல் துவண்டது. அவர்கள் கட்டிலில் கிடத்தியிருக்கும் உருவத்தைக் கண்டார்கள். அவர்களால் நிற்கக் கூடவில்லை. தாயார் அருகிலேயே இருவரும் சாய்ந்தனர். அன்னையார் மூர்ச்சித்திருக்கின்றனர் என்ற எண்ணம் அவர்களுக்குத் தோன்றிற்று. ஆதலின், அங்குள்ளாரை நோக்கி, "ஒரு சிகிச்சையும் இயற்றாமல் ஏன் நிற்கின்றீர்! காற்றை மறைத்துச் சூழ்ந்து நிற்பின், அன்னையார் தூய காற்றைப் பெறுதல் யாங்ஙனம்! மயக்கம் விரைவில் தெளியாத வகையை நீங்களே தேடுகின்றீர்கள் போலும்! முகஞ்சாம்பி இருப்பதில் பயன் என்னை! காலத்திற்குத் தக்க காரியத்தைக் கைக்கொள்ளலன்றோ அறிவுடைமை! நீரைக் கொண்டு வாருங்கள்! காற்றை விடுங்கள்! விசிறி எடுத்து வீசுங்கள்! உணவை வரவழையுங்கள்!" எனச் செப்பிக்கொண்டே சிறிது நேரம் தாயார் முகத்தை உற்று நோக்கினர். அவர்களுக்கு ஒன்றும் தோன்றிலது. சில நிமிடங்கள் அவர்கள் வாய் ஒன்றையும் கூறிற்றிலது; மெய் அசைந்திலது; கண்கள் இமை கொட்டில. சிறிது அசைவேனும் தம் தாயாரிடம் ஏற்படுகிறதா எனக் கூர்ந்து கூர்ந்து பார்த்தனர். ஒரு சமயம் சிறிது அசைவு உண்டாவது போலக் காணப்பட்டது. அப்போதும் அவர்களுக்கு உண்மை தெரியவில்லை. சகோதரிமார் இரு

வரும் அன்னையார் கரத்தையும், இருதயத்தையும் மாறி மாறிப் பரிசித்தனர். தாயார் மாட்டு அவர்களுக்கிருந்த அன்பும், அவர்கள் உடல் நடுக்கமும் சேர்ந்து அரசியார் சிறு மூச்சுவிடுவதுபோல அவர்களுக்குத் தோற்றுவித்தன. " தாயாருக்கு என்ன நேர்ந்தது ? யார் என்ன செய்தனர்? அந்தோ ! மயக்கமாகவா படுத்துள்ளார் ? நோயொன்று மின்றியே இங்ஙனம் மூர்ச்சிக்கக் காரணம் யாது ? அவருக்கு நீங்கள் செய்த குற்றமென்ன ? உடனே சொல்லுங்கள் ! ஏன் வாய் பேசமாட்டீர்கள் ? வஞ்சனை ஏதேனும் நடந்ததா ? இப்போது என்ன செய்தால் அவர் மூர்ச்சை தெளியும் ? எம் அருமைத் தந்தையார் இதை உணர்வரா ? கபிலராகிய பெரியார் இதைக் கண்டனரா ? அவர்கள் ஏன் இங்கு வரவில்லை ? உடனே அவர்களைக் கொணருங்கள் ! இவர் மயக்கம் தெளிந்தெழும் உபாயம் இப்போதேசெய்ய வேண்டும் ! ஏன் மரங்களைப்போல நிற்கின்றீர்கள் ? இத்துன்பம் உங்கள் மனத்தை உறுத்தவில்லையா ? எம் தந்தையாருக்கு இப்போதும் அங்கு என்ன வேலை ? எமக்குத் தெரிவியாதது போன்றே அவருக்கும் நீங்கள் அறிவிக்கவில்லை போலும் ! இத்தீரம் உங்களுக்குத் தந்தவர் யார் ? உடனே செல்லுங்கள் ! அவரை அழையுங்கள் ! இம்மூர்ச்சையை இங்ஙனமே விடில் கெடுதி நேரினும் நேரலாம்," எனச் சகோதரிமார் இருவரும் செப்பிக்கொண்டிருக்கும் போதே ஆற்றொணாத்துயருடன் கபிலர் உள் நுழைந்தார். அவர் வந்த விரைவும் அலங்கோலமும் யாவர் மனத்தையும் திடுக்கிடச் செய்தன. அவர் கண்கள் அரசியாரை நோக்கின ! " ஆ ! ஆ ! நீயுமா போய்விட்டனை ! உத்தம மனைவி என்பதை உலகமறியச் செய்து

னையோ ! கணவன் உயிரைத் தேடிக் கடுக நடந்தனையோ !'
இக்கொடுமை எங்கு நடக்கும் ! அருமை மகளிரை விட்டு
இருவரும் ஒருவர் பின்னொருவர் ஓடலாமா ! ஈதென்ன
அநியாயம் ! ஈகைக்கரசனைத்தான் கயவர் இழிதொழில்
கொன்றது என்னில், உன்னையும் யார் என்ன செய்தனர் ?
நீயேனும் மகளிரை மனங்கொண்டு உயிர் வாழ வேண்
டாவா ? கணவன் இறக்கில் மனைவியும் இறத்தலென்பது
எப்போது பொருந்தும் ! மக்களற்ற காலத்திலன்றோ !
உன் துயரத்தைப் பொறாமல் நீ கணவனுடன் சென்றால்,
இவ்வனிதையர் உம் இருவரையும் பிரிந்த துக்கத்தைத்
தாங்குதல் யாங்ஙனம் ! இது தன்னலம் பாராட்டும் செய்
கை அன்றோ !—அருமை மகளிரே ! உங்களுக்குத் தாய்
தந்தையர் இருவரையும் இழக்கும் காலம் நேர்ந்ததே !
ஆதரவற்றீரே! அந்தோ ! உங்களைப் பாதுகாப்பவர் யார் !
பூங்கொடி போன்ற உங்களை உத்தம அரசர்களாகிய
கொழு கொம்புகளில் படர வைத்து இவர்கள் போயிருப்
பின், உலகம் இங்ஙனம் பரிதவியாதே ! யான் என் செய்
வேன் ! உங்களை எங்குக் கொண்டு போவேன் ! பகையர
சர் சூழ்ந்துள்ளனரே ! அரணை விட்டு இப்போதே நாம்
அகல வேண்டுமே !—ஆ ! கடவுளே ! இஃதும் ஒரு
சோதனையா ! இது பெரிய சோதனைதான் ! உங்கள் பிற்
கால வாழ்க்கையைப் பெருமைப்படுத்த வேண்டுமே !
பெற்றோரை இழந்த பெண்டிராணீரே !" எனத் தம்மைத்
தாமறியாது கபிலர் அரற்றினர்.

கபிலர் செப்பிய கடுஞ்சொற்கள் யாவும் கன்னியர்
செவியில் நுழைந்தன. அப்போதுதான் தம் இருமுது
குரவரும் உயிர்துறந்தனர் என்பது அவர்களுக்குத் தெரிந்

தது. பாரி மன்னர் மூவேந்தர் வஞ்சனையால் கொல்லப்பட்டதையும், அதை ஆற்றாது அரசியார் உயிர் நீத்ததையும் அவர் அறிந்தனர். அவ்வமயம் அவர்கள் நிலைமையை என்னென்று கூறலாம்! இளவயதில் இருமுதுகுரவர்களில் ஒருவரை இழக்க நேர்வதும் பெருந்துன்பந் தருவதொன்றாகும்! ஓர் இமைப்போதில் இருவரையும் இழந்தனர்! ஆதரிப்பவரோ, ஒருவருமிலர்! பகையரசரோ, நாட்டைச் சூழ்ந்துள்ளனர்! பெற்றோரோ, இயற்கை மரணத்தைப் பெற்றிலர்! வஞ்சனையும், அநியாயமுங் கலந்த மரணம் அவர்களுக்கு நேர்ந்தது! ஆவி நீங்கும் போதோ, அம்மகளிர் அருகிலில்லை! அந்திய கால அருமை வார்த்தை ஒன்றையும் மகளிர் பெற்றிலர்! அவர்கள் பிற்கால வாழ்க்கையைப் பற்றிப் பெற்றோர் எதையும் பணித்தாரில்லை. அவ்விரு மகளிரும் போகும் வழியையும் வசிக்கும் இடத்தையும் அறிந்திலர். அரசச் செல்வியர் யாசக நிலைக்கு வந்துவிட்டனர்! இந்நிலையில் மங்கையர் மனநிலை எங்ஙனம் இருந்திருக்கும்! அஃது ஒருவராலும் அளந்தறியும் தன்மையதன்று.

தம் இருமுதுகுரவரும் உயிர் நீத்ததை உணர்ந்த பாரி மகளிர், மன மருண்டு மூர்ச்சித்துக் கீழே சாய்ந்தனர். அருகிருந்தவர்கள் செய்த உபசாரத்தினால் அவர்களுக்குச் சிறிது தெளிவுண்டாயிற்று. இருவரும் சுற்றிச் சுற்றிப் பார்த்தனர்; ஒன்றுந் தோன்றாது சிறிது நேரம் திகைத்தனர். "உண்மையாகவா எம் அன்னையார் இறந்தனர்! எம் அருமைத் தாயாரின் வெற்றுடம்பா இங்குக் கிடக்கின்றது! ஆனால், இனி அவர் எம்முடன் பேசி நகைத்தல் செய்யாரா! எம்மை அன்புடன் அணைத்து முத்தமிட

மாட்டாரா ! அவர் அறிவுரையை இனி எம்மால் கேட்க இயலாதா ! ஆ ! இனி எமக்குப் புத்தி புகட்டுபவர் யார் ! எம் உண்டி உடைகளைக் குறித்து இனி யார் கவலையெடுத்துக்கொள்வர் ! முறை வழுவி நடக்குங்கால் வாய்மை வழி நிறுத்தும் அன்னையரை இழந்தோமே! அந்தோ ! எம் கண்ணனைய அன்னையரையா தோற்றோம்! உயிரனைய எம் தந்தையரும் உயிர் நீத்தனர் என்றனன்றோ கபிலர் கழறினர் ! ஈதென்ன காலம் ! இருவரையும் ஒரே இடத்தில், ஒரே காலத்தில் இழக்க நேரிடுமோ ! இஃது எங்கேனும் நடைபெறுமா ! இவ்வுலகில் ஒருவரும் இத்தகைய கொடிய துயருக்கு ஆளாகியிரார் என்பது திண்ணம் ! ஒருவரை இழத்தல் உலக வழக்காயிருக்கலாம் ! இருவரையுமா இழத்தல் வேண்டும்! ஐயோ! இத்தீய துக்கம் வந்து சார்தற்கு யாங்கள் இழைத்தபாபம் யாதோ! பகை வருக்கும் இக்கொடுமை உண்டாதல் கூடாதே ! யாரை இனி நாங்கள் உறவெனக் கருதுவோம் ! எவரை நம்பி உயிர் வாழ்வோம் !—இந்த நிலையில் விட்டுச் செல்லவா எம்மைப் பெற்றீர் ! எங்கேனும் யாங்கள் தனித்துச் செல்லல் முடியுமா ! இருவரும் பெண்களாகவே பிறந்தோமே ! எங்களுடன் ஓர் ஆண்மகன் தோன்றியிருப்பினும் அவன் எங்களை இப்போது தேற்றுவனே ! அவனைக் கொண்டு யாங்களும் சிறிது தெளிவோமே ! நீர் எமக்கு யாரைத் துணைவிட்டுச் சென்றீர்! எம் வாழ்க்கையைப்பற்றி என்ன வரையறுத்தீர் ! இஃது நன்றோர் கடமையன்றோ ! இதை மறந்துவிட்டீரா !—ஓ தந்தையரே ; உலகம் புகழ நாட்டைத் தகவுடன் ஆண்ட உமக்கு இந்நியாயம் புலப்படாமற் போயிற்று ! நீர் எம் பிற்கால நிலைமையைச் சிறிதும்

நினைக்கவில்லையே ! அதற்கு உம் அறிவுடைமை இடந்தராதது யாங்ஙனம்! உம் ஆவி ஆறுதலுடன் நீங்கிற்று! அஃது எவ்வாறு முடியும்! அந்தோ! நீரென்ன செய்வீர்! எம் தீவினையன்றோ இக்கொடுமையை உமக்கு இழைத்துள்ளது!—அன்னையீர், கணவர் உயிர் துறந்தது செவி நுழைந்தவுடன் உம் ஆருயிர் நீங்கிற்றே! ஈதன்றோ உத்தம மனைவியரின் இலக்கணம்! இதுதானே உண்மையன்பெனப் பகருவது! நூலளவில் அறிந்த அநுமரணத்தின் இயல்பை யாங்கள் இன்றன்றோ செய்கை முறையில் கண்டோம்! இஃது எவருக்கு நேரும்! உலகுள்ளளவும் இது பெருங்கீர்த்தியன்றோ உமக்கு! இத்தகையோரைத் தெய்வமென்றல்லவோ நம் தமிழ் நாடு வணங்குகிறது! உலகம் போற்றத் தோன்றிய தெய்வ சிகாமணியே! தேவருலகத்திற் சென்று நீர் பெருஞ்சிறப்படைந்துள்ளீரோ! ஆம் ஆம்! அஃது உண்மையே! உம்மிடம் பிறந்தும் உம்மிடம் வளர்ந்தும் வந்த நாங்கள் உம் உண்மையை இதுகாறும் உணர்ந்தோமில்லை. இச்சீரிய பதி பக்தி வாய்ந்த உம் பண்பை அறியும் ஆற்றல் எம்மிடம் அணுகாமற் போயிற்றே! யாங்கள் தாமரையினுடன் பிறந்த மண்டூகங்களாயினேம். உம் தெய்வத் தன்மையை ஓர்ந்த எவர் தாம் உம்மைப் புகழார்! மண்ணில் புகழ்க்கொடியை நாட்டிய மாதாவே! நீர் எம்மாட்டு ஊன்றிய அன்புடையீர் என்பதை யாம் அறிவோம்! எம் காலிற்பட்டது உம் கண்ணிற் பட்டதெனக் கருதும் தன்மை உமக்குண்டு! நீர் உம் ஆவி எனவே எம்மை ஆதரித்தீர்! எம் நலங்களுக்கு அரும்பாடு பட்டீர்! எம் உடல் வளர்ச்சியும், கல்விப் பெருக்கமும், அறிவுத் தேர்ச்சியுமே உம் பெரும்பேறெனக்

கருதும் கண்ணியம் உம்மிடமிருந்தது ! அதற்கேற்றமுறை களையுந் தேடினீர் ! உம் கண்ணின் மணியென எம்மைக் காக்கவில்லையா ! என்றும் உம் இருதயத்தில் யாங்கள் இருந்தோம். உமக்கு எம்மைக்காட்டிலும் சிறந்த வாழ்வு வேறொன்றுமில்லையெனப் பன்முறை நீர் உமதுசெய்கையிற் காட்டியுள்ளீர்! நீர் எம்மாட்டு வைத்த இத்துணை அன்பை யும் உம் கற்பின் நிலை வென்றுவிட்டது போலும் ! மக்க ளன்பை மணாளரன்பு தோற்கடித்தது. ஈதன்றோ விந்தை ! ஆருயிரன்னையீர், எம்மிடம் செலுத்திய உமது அன்பு இங் ஙனம் குறைந்ததற்குக் காரணம் யாது ! உமக்கு யாங்கள் யாது பிழை இழைத்தோம் ! சிறியோர் செய்த சிறுபிழை யைப் பெரியோர் பொறுத்தல் கடமையன்றோ ! மக்கள் குற்றப்பட்டுழித் திருத்திப் பணி கொள்ளல் தாயைச் சார்ந்ததல்லவா ! இங்ஙனமும் எம்மை வஞ்சிக்கலாமா ! இது கொடுமையினும் கொடுமையே !

"அருமைத் தந்தையரே, நீர் எங்குச் சென்றீர் ! யார் உம்மை அழைத்தேகினர் ! பெருமையுடன் வந்து தேவர் உம்மை அழைத்துச் சென்றனரோ ! அவர்தமக்கு விருந் தானீர் போலும் ! கீர்த்தி வாய்ந்த இல்லக் கிழத்தியரைப் பெற்ற நீர் ஆண் சிங்கம் போன்று அவர் முன் நடந்து செல்வீர் என்பது யாமறிவோம். இங்கு நீர் ஈந்த ஈகை யின் கொடிகள் நீர் சென்ற அச்சாலை முழுதும் இருந்த மரங் களிற் படர்ந்தேறி உமக்கு நிழல் செய்தனவோ ! நீர் இவண் அமைத்த அறச்சாலைகள் யாவும் அவண் உமக்குக் காட்சி அளித்திருக்கும். 'கற்புத் திலகத்துடன் வந்த கண்ணியர்!' என உம்மைச் சான்றோர் கொண்டாடினரோ ! உம் இரு வரையும் தேவர் எதிர்கொண்டு அழைத்னரா ! உம்

ஞானமே மங்கல விளக்கென அங்கு ஒளிர்ந்ததோ! உம் கருணையே அவண் மரங்களாகத் தழைத்து நிழல் கொடுத்தனவோ! உம் செப்பமுடைமையே செவ்விய இடமாக உமக்கு அமைந்ததோ! நீர் குடிகளிடம் செலுத்திய அன்பே உம் அகமகிழ்ச்சிக்கும் காரணமாக ஆர்ந்ததோ! கபிலர் போதித்த நீதியே உமக்கு நன்னெறியைக் காட்டும் என்பது திண்ணம். அவர் நட்புறுதியே உம்மை நாயக முறையில் நிறுத்துவதாகும். ஆ! தந்தையீர், இங்ஙனம் அனாதைகளாய் எம்மை விட்டு நீர் செல்லலாமா! இதற்காகவா அருமை பெற எம்மை வளர்த்தீர்! அருங்கலைகளை எமக்குப் போதித்தீர்! பெண் மக்கள் தாமே என எம்மை ஒரு போதேனும் நீர் கருதினீரா! ஆண் மக்களென ஆண்மை தந்து வளர்த்தீரே! எமக்குக் குறைவொன்றும் புரியாக் கொற்றவரே! போர்த்திறம் தவிர மற்றெல்லாத் திறத்திலும் எம்மைச் சிறக்கவைத்தீர். 'நமக்குப் பகைவர் ஒருவருமிலர்,' என்ற உம் நம்பிக்கை அன்றோ அவ்வன்மையையும் எமக்கு அளியாமற் போனது! எவ்வரசர், எப்பெரியார், பெண்களுக்கு இச்சிறப்பை ஏற்படுத்தினர்! தமிழ் நாட்டரசர் பெண்களை உயர்த்துதற்கேற்ற வழிகளைத் தேடுதல் இயல்பு என யாங்கள் கேள்விப்பட்டதுண்டு. ஆயினும், அக்காரியத்தில் தலை சிறந்தவர் நீரே என்பதை மறுக்க ஒருவராலும் இயலாது. எம்மாட்டு நீர் காட்டிய அன்பின் திறமென்னே! எம்மைப் பண்புடையராக்க நீர் கொண்ட முயற்சி சிறிதோ! யாங்கள் கற்குந்தோறும் கற்குந்தோறும் நீர் களிப்படைந்தீரே! எம் அறிவைப் பெரியோர் வாயிலாகக் கேட்டு, யாங்கள் பிறந்த போதினும் பெரிதுவந்தீரே! கேவலும்

உண்டி உடையைக் கொடுத்து எம்மை வளர்த்தலில் மாத் திரமா உம் கருத்துச் சென்றது! கல்வி ஆடையையும், அறிவு அணியையும் எமக்கு அணிவித்தீரே! அற்ப விஷ யத்தில் எங்கள் மனஞ் செல்லாவாறு ஆதரித்தவர் யார்! அறிவு நூல்களின் ஆனந்தத்தை அனுபவிக்கச் செய்தவர் எவர்! இயற்கைத் தத்துவங்களின் இயல்பறியும் திறன் எவ்வாறு எமக்குவாய்த்தது! புலவர் புகழ்மாரி எம்மாட்டு எப்படிப் பெய்தது! சான்றோர் ஆசியை நாங்கள் சார்ந் தது யாங்ஙனம்! பொருளற்ற எம்மைப் பொருளாக்கி வைத்த எம் தந்தையீர், உமக்கு யாங்கள் செய்த கைம் மாறுதான் யாது! கைம்மாறு! கெடுதியன்றோ செய்துள் ளோம்! மக்களைப் பெறுதல் மகிழ்வுக்கென உலகம் கூறும். பெற்றோர் உயிரையும் உடலையுங் காக்கவே பிள்ளைகள் வேண்டுமென உலகோர் தவம் பல இயற்றுவர். அக்கருத் தைப் பொய்யாக்கவன்றோ யாங்கள் தோன்றினோம்! மாதா பிதாக்களின் ஆன்மாவிற்கு மகளிரால் அழிவு நேர்ந் தது என உலகம் வசை கூறவல்லவா உடலெடுத்தோம்! மூவேந்தரின் சூழ்ச்சியா உம் ஆவியை அகற்றியது! இல்லை, இல்லை! ஆழ்ந்து நோக்கில், எம்மாட்டு உமக் கிருந்த அன்பன்றோ உம் உயிருக்கு உலை வைத்தது! எங் கள் நன்மையைக் கருதியன்றோ உம் நல்வாழ்க்கையைத் துறந்தீர்! அந்தோ! எம்மை எவருக்கேனும் தொலைத் திருந்தால் இக்கொடுமை உமக்கு நேர்ந்திராதே! எம் அன்னையாரும் ஆயுள் பெற்றிருப்பரே! நன்மை இயற்றிய. உமக்கு யாங்கள் தீமையேனும் இயற்றுமலிருந்தோமா! இவ்விஷயத்தில் யாங்கள் ஓர் உதவியும் புரிய .வண்மை அற்றவர்களானோமே! மலையளவு தந்த உமக்குக் கடு

களவுந் தரப் பாக்கியமற்ரேமே! தாய் தந்தையருக்குப் பணியியற்றும் தவத்தை இயற்றிலோமே! பெற்ருேரைப் பேணிப் பெறும் மகிழ்வு எம்மாட்டு அணுகிலதே! யாங்கள் உம்மை இழந்து என்ன செய்ய இவ்வுலகில் உள்ளோம்! மரத்தை நட்ட ஒருவன் பயனை அனுபவி யாது கழிதல் போன்று எம் நன்மை ஒன்றையும் பெருது நீங்கினீரே! அன்றறிவாமென்னுது அறஞ்செய் யும் அறிவுடையீர்! தாய்தந்தையரை இழந்த பாவிக ளாஞேமே! பெற்ருேர்க்குப் பெருமகிழ்ச்சியை ஈயாத பிள்ளைகளும் பிள்ளைகளாவார்களோ! ஓர் உறுதிச் சொல் லேனும் நீர் எங்களுக்குச் செப்பினீரா! அந்தோ! எதை நினைத்து நாங்கள் இவ்வுலகில் வாழ வேண்டும்! உம்மை அழைத்துச் சென்ற காலன் ஏன் எம்மையும் அழைத்துச் செல்லுதல் கூடாது! அத்துணை நல்வினை எம்மிடம் இல்லை போலும்! வருடங்கள் பல பெற்ருேரை வாய்க் கப்பெற்று மகிழ்வுடன் சிலர் வாழ்கின்றனரே! அவர்க ளல்லவா பாக்கியசாலிகள்! அத்தவம் யாங்கள் இழைத் திருந்தாலன்ருே எங்களுக்கு அத்தகு பாக்கியம் கிட்டும்! ஆ! கடவுளே! இத்துணைத் துன்பமும் எங்களுக்கு நேர லாமா! யாங்கள் செய்த தீமை யாதோ! செய்தீவினை இருக்கத் தெய்வத்தை நோவது எதைக் கருதி!" எனத் தம்மைத் தாமறியாமல் சகோதரிமார் இருவரும் கதறி அழுதனர்.

அவர்கள் பட்ட துன்பம் சூழ இருந்த யாவர் மனத் தையும் உருக்கிவிட்டது. அவர்களும் கூக்குரலிட்டு அழு தார்கள். அவ்வருத்தம் கபிலரையும் கலக்கியது. ஆயி னும், அவர் அறிவுடைமை அதை ஆற்றியது. அவர் சிறிது

தெளிந்து, மங்கையரை அருகழைத்துத் தேறுதல் செப்பினர். அவர்கள் மனத்தை ஆற்ற அவர் இயம்பிய பொருள்கள் பல. உலக இயற்கையையும் மக்கள் போக்கையும் அவர் நம் மகளிர்க்குப் போதித்ததும், அவர்களுக்குச் சிறிது தெளிவு பிறந்தது. நம் அன்னையர் ஆற்றெணுத்துயரத்தில் ஆழ்ந்திருப்பினும், கபிலர் தந்து வச்சொற்கள் அவர்கள் மனத்திற் பதிந்தன. நம் மங்கையரும் கல்வியறிவிற் சிறந்தவரல்லரோ! ஆசிரியர் போதித்தவற்றை விளக்கை அடைந்த கற்பூரமெனப் பற்றிக் கொண்டார்கள். அவர்களுக்குச் சிறிது மனத்தெளிவு உண்டானது.

நன்கு கற்றுத் துறைபோயவரேயாயினும், மிக்க அன்புடையாரைப் பிரியுங்கால் வருந்தாமலிருக்க இயலுவதில்லை. ஆனல், குறைந்த அறிவுடையோர் அத்துக்கத்திலேயே ஆழ்ந்து, தாம் இயற்றவிருக்கும் கடமைகளைப் புரியாது, வாளா இருப்பர். நிறைந்த அறிவுடையரோ, உலக இயல்பை உணர்ந்து, அத்துயரத்தை ஒருவாறு தள்ளித் தம் கொள்கைகளைக் குறைவின்றி முடிக்க முயலுவர். நம் பாரி மகளிரும் கல்வியறிவில் தேர்ந்தவராதலின், அப்பெருந்துயரத்தை மனத்துள் அடக்கினர். ஆயினும், அடிக்கடி அத்துக்கம் அவர்களை வருத்திக்கொண்டே இருந்தது.

இங்ஙனம் மகளிர்க்கு ஆறுதல் கூறித் தேற்றிய கபிலர், அவ்வருமை மங்கையர்க்குப் பொருத்தமான தலைவரைத் தேடப் பறம்பு நாட்டினின்று புறப்பட்டனர். தம் நண்பரும் தாமும் இன்புற்றிருந்த அந்நாட்டை விட்டு நீங்குங்கால் அவருக்குண்டான கவலைக்கு வரம்பு கூறல்

இல்லாது. புன்னகை கலந்த இனிய முகத்தோடுங்கூடிய வேள் பாரியாரின் முகத்தோற்றம் உருவெளியாகப் பன் முறை அவர் முன் தோன்றிற்று. அவர் அரச நீதியும், போர்த்திறமும், புலவர்க்கீயும் வள்ளல் தன்மையும் ஒன்றின் பின் ஒன்றாக அவர் நினைவிற்கு வந்தன. அவர் குற்றமிழைத்தாரிடம் நடக்கும் முறையும், தீயோர் நல்லோர்களிடம் முறையே பகரும் கடிய இனிய வார்த்தைகளும், அமைச்சரோடு விஷயங்களை ஆராயுங் கால் புகலும் பொருள் நுட்பங்களும், தம்மோடு கலந்தி ருக்கும்போது இயம்பும் இனிமையும் பொருளும் நிறைந்த சொற்களும் அவர் நெஞ்சில் தோன்றித் தோன்றி மறைந் தன. பாரியாரின் இயல்புகளில் எதை நினைப்பினும் அது அவருக்குப் பெருந்துன்பத்திற்கே காரணமாயிருந்தது. அவற்றைச் சிந்தியாமலிருத்தற்கும் அவரால் கூடவில்லை. அன்றித் தம் துயரத்தை வெளிக் காட்டவும் அவரது அப்போதைய நிலை இடந் தந்திலது. தாமே வருந் தின், அம்மக்கள் தன்மை என்னாகும் என எண்ணித் தம் ஆற்றொணாத் துக்கத்தைப் பெரிதும் மறைத்தனர். "நன்மையையே நாடியிருந்த பாரிக்கும் இத்தீமை விளைந்ததே! தினை விளைத்தவர் தினையையே அறுத்தல் போன்று, நன்மை புரிந்தோர் நன்மையையே துய்ப்பர் என்பது இவன்பால் பொய்த்துவிட்டதே! செய் தீவினை இருக்கத் தெய்வத்தை நோவதில் பயன் யாது! எல்லாம் வல்ல இறைவ, உன் அருள் திறத்தை அறிய வல்லர் யார்!" என ஒருவாறு தெளிந்தனர். அந்தோ! என் செய்வார் புலமையில் சிறந்த புலவர்! அவரது கரை கடந்த கவலைக் கடலைக் கரை புரளாமல் தடுத்தது அவர் உயரிய ஞானமே

ஆகும். துயரம் என்பது யாவருக்கும் பொதுவேயாயி னும், அதை மேற்கொள்வதில் அறிவுடையோருக்கும் மற்றையோருக்கும் வேறுபாடு உண்டு என முன்னரே கூறியுள்ளோம்.

கபிலர் பறம்பு அரணைப் பன்முறை உற்று உற்று நோக்கினர்; பெருமூச்செறிந்தனர்; மேற்செல்லக் கால் எழாமல் தளர்ந்தனர்; செல்லும்போதும் திரும்பித் திரும்பிப் பன்முறை அரணை நோக்கினர்.

பின்பு அவர் வருத்தம் உள்ளடங்க மாட்டாது பொங்கி வழிந்தது. அஃது அன்புப் பாக்களாக வெளிக்கிளம்பிப் பறம்பு மலையையும், நாட்டையும், வள்ளற் பாரியாரையும் புகழ்ந்தது. அப்புகழ்ப் பாக்களோடும், புண்ணிய வனிதையரோடும் புலவர் தம் உயிர் நண்பர் நாட்டைக் கடந்து சென்றார்.

## 9. கபிலரும் பாரி மகளிரும்

அங்ஙனம் செல்லும் கபிலருக்கு ஒன்றின்பின்னொன் றாகப் பல எண்ணங்கள் தோன்றின: "இப்பெண் மணி களின் பெரும்பொறுப்பு நம்மைச் சார்ந்துள்ளதே! இவர்கள் கல்விக்கும், புலமைக்கும், குலத்திற்கும், பண் பிற்கும் ஏற்ற மண மக்களிடம் இவர்களை ஒப்படைத்த லன்றோ தகுதி! இன்றேல், இவர்கள் வாழ்க்கை அடி யோடு கெடுமே! நட்பினனுடன் உயிர் துறவாமல் இருப் பதற்குத்தான் பயனென்னை!" எனச்சிந்தித்துக்கொண்டே புலவர் வழி நடந்தனர். அவர் கால்கள் நடந்தனவே அன்றி, அவர் மனம் வழியை நோக்கிற்றிலது. பாரியா

ரின் பிரிவும் அப்பெண் திலகங்களின் அனுதாப நிலைமை யும் அவர் நெஞ்சை இறுகப் பிணித்தன.

இனிப் பாரி மகளிரின் நிலைமையைச் சிறிது நோக்கு வோம்: அம்மங்கையர் செல்வச் சிறப்பில் திளைத்திருந்த திருவனையர்; என்றும் வழி நடந்தறியா வனிதையர்; துயர நிலை இன்னதெனத் தெரியாத் தோகையர். அவர் கள் களைத்த தேகத்தையும், சலித்த மனத்தையும், பெருத்த துக்கத்தையுங் கொண்டு வழி நடக்கலானார்கள். அங்ஙனஞ் செல்லுங்கால் அவர்கள் நெஞ்சிலுதித்த எண் ணங்களோ, பலப்பல. "அந்தோ! நாம் இத்தகைக் கொடிய தன்மைக்கு ஆட்படுவோமெனக் கனவிலும் கருதினோமில்லையே! என்ன இடுக்கண்! என்ன இடுக் கண்! நம்மைப்போன்று தீய ஊழால் சூழப்பட்டவரைக் காணல் மிக அருமையே! நமக்கென்றே இத்தனிப்பட்ட ஊழை இறைவர் உண்டாக்கினர் போலும்! நம்மொத்த அரச மகளிர் நம்மைக்காணில் நகையாரோ! நாமும் இவ் விடையூறுகளுக்கிடையில் உயிர் பிழைத்திருக்கின் றோமே! செல்வமிழந்தது பெரிதன்று. நம் அருமைப் பெற்றோரையும் இழந்து நாம் ஆதரவற்றவர்களானோமே! இவ்வுலகில் இதற்கு மேற்பட்ட இன்னல் வேறுளதோ! நம் பிற்கால நிலை இனி என்னாகும் என நினைக்கில், நம் நெஞ்சம் பிளந்துவிடும்போலிருக்கிறதே! நம் பொறுப்பு இப்போது புலவர் தலையிலேறிற்றே! இவர் என்ன செய் வார் பாவம்! நமக்காகவன்றோ இவர் பெரிதும் துன்புறு கின்றனர்! இயற்றிய தீய வினைகள் சாலாவென இவருக் குச் சுமையாயிருக்கும் கன்மத்தையும் இப்போது தேடிக் கொள்ளுகின்றோமே! எத்தனை நாட்கள் இவர் நம்மை

அழைத்துக்கொண்டலைவர்! ஓ! கடவுளே! உமக்கு இஃது ஒரு விளையாட்டுப் போலும்!'' என நினைத்துக் கொண்டே குருவின் பின் செல்லும் உத்தம மாணவ ரெனச் சகோதரிமார் இருவரும் புலவர் பின் சென்றனர்.

அம்மூவரும் அன்றிரவு ஓர் ஊரில் தங்கினர். இனிய பாற்கவளம் போன்று சந்திரன் வானத்தில் தோன் றிற்று. அவர்கள் இறங்கியிருந்த இடம் அதிக மர அடர்ச்சி அற்றதும், மாளிகைகளின் நெருக்கமற்றது மான ஓர் அழகிய மலர் வனம். அஃது இரவு ஆதலின், தாய்ப் பறவைகள் பல குஞ்சுகளுடன் வந்து மரக்கிளை களிற்றங்கித் தங்கள் மொழிகளில் என்னவோ மகிழ்வுடன் பேசிக்கொண்டிருந்தன. பகல் முழுதும் பொருளீட்ட வெளிச்சென்ற நாயகர் வீடு திரும்பும் இரவுப்போதில் தம்மை அணி செய்துகொண்டு மலர்ந்த இனிய முகத் துடன் அவரை எதிர்கொண்டழைக்கும் கற்பு மணிகளைப் போன்று குமுதம் முதலிய சில மலர்கள் விகசித்துச் சந்திரனை வரவேற்றன. பூத்த கிளைகள், மரங்கள். தங்கள் கரங்களில் மலரேந்திச் சந்திரனை மகிழ்விப்பது போன்று தோன்றின. பறவைகள் சில தங்கள் கூடுகளில் நுழை தல், நீங்கிய உயிர் உடலில் வந்து புகுவது போன்றிருந் தது. குரங்குகள் சில மரங்களில் தாவிக்கொண்டும், கிளை களைப் பிடித்து ஊசலாடிக்கொண்டும் இருந்தன. சில கடுவன்கள் கனிந்த பழங்களைப் பறித்து மந்திகளுக்குக் கொடுப்ப, அவைகள் அவற்றைத் தங்கள் குட்டிகளுக்கு ஊட்டிக் களித்தன. ஆங்காங்கே அடர்ந்த இலைகளின் இடையில் சந்திரன் நிலவு பாய்ந்தது, பல சந்திரன் உதித்தாலென நிலத்தில் தோன்றியது. பழுத்த பழங்கள்,

பூத்த மலர்கள் இவற்றிலிருந்து துளித்த தேன் தரையை நனைத்தது. சில பறவைகள் பாடும் ஒலியும், சில பறவைகள் பறக்கும் அரவமும், சில பறவைகள் மரக்கிளைகளில் வந்துட்காருங்கால் உண்டாகும் உலர்ந்த இலைகளின் ஓசையும் கலந்து ஒலித்தன.

ஆங்குச் சிறு ஓடை ஒன்று பாய்ந்துகொண்டிருந்தது. அது தெளிவும் ஆழமுமுடையதாய்க் காணப்பட்டது. அதில் நீர்ப்பறவைகள் பல ஒன்றின்மேலொன்று நீரை இறைத்து நீந்திக்கொண்டிருந்தன. அவைகளின் வெண்மைநிறம், சந்திரனையும் நாணச் செய்தது. அவ்வோடையின் அருகில் பளிங்குக் கற்களினாலாய வேதிகைகள் சில கட்டப்பட்டிருந்தன. மலர்ப் படுக்கை இட்டாலெனப் பல வகைப் புஷ்பங்கள் அவற்றில் உதிர்ந்திருந்தன. மலர்களின் மணமும், பழங்களின் வாசமும், ஆங்காங்கு அமைந்திருந்த வீடுகளிலிருந்துண்டாகும் அகிற் புகை முதலியவற்றின் பரிமளமும் கலந்து, மிக இனிமை பெற வீசிற்று.

புலவரும் பாரி மகளிரும் திண்ணையின்மேலமர்ந்தனர். பால் போன்ற வெண்ணிலவு பொருந்திய நிலவின் காட்சி யார் மனத்தைத்தான் மகிழ்வியாது! ஆயினும், அம்மூவரும் அக்காட்சியின் இனிமையில் ஈடுபட்டிலர். சில பொருள்கள் பொதுவாக யாவருக்கும்இன்பத்தையே அளிப்பனவாயினும், அவரவர் நிலைமைக்கேற்றவாறு பயனளித்தல் இயல்புதானே! சீதை, தமயந்தி முதலியவர்களுக்குத் தங்கள் காதலர் பிரிவில் துன்பமளித்த சந்திரன், பெற்றோரையும் செல்வத்தையும் இழந்த அம்மகளிர்க்கும் துயரத்தை அளித்தது. அன்றியும் பாரி மகளிர்

இயற்கை அழகுகளின் இயல்பறிந்து கவி பாடும் புலமைச் செல்வியர் அல்லரோ! அவ்வனிதையர், நன்னிலைமையில் இருந்திருப்பரேல் அவ்வியற்கை அழகுகளைத் தம் இனிய கவிகளினாற் பெரிதும் அணி செய்திருப்பர். நல்லிசைப் புலவராலும் புகழப்படும் அம் மகளிர் பொருட் செறிந்த கவியைப் பெறும் புண்ணியத்தை அவ்விரவும் அம்மலர் வனமும் பெற்றில. அவ்வின்பக் காட்சிகள் அவர்களுக்குத் துன்பமாக மாறி, அவர்கள் நெஞ்சை உருக்கின.

**தங்கை** :—என் கண்ணனைய தமக்கையீர், சென்ற முழு மதிப் போது நம் அரண்மனை நிலா முற்றத்தின் நாப்பண் அழகாக அமைக்கப்பட்ட பளிங்குப் பீடத்தின்மேல் நாம் வீற்றிருந்து என்ன இன்பகரமான பொருளைப் பற்றிப் பேசிக்கொண்டிருந்தோம்! அஃது உம் நினைவிற்கு வருகிறதா? சந்திரன் வளர்தற்கும், குறைதற்கும் பூமி சாஸ்திரத்தின்படி ஏற்பட்டுள்ள முறையையும் நம்மனோரில் சிலர் கூறும் காரணங்களையும் பேசி முடித்தோம் அல்லவா! யான் அவற்றில் சிலவற்றை மறந்துவிட்டேன். உமக்கு நினைவிருப்பின் கூறுவீரா!

**தமக்கை** :—ஆம், என் அருமைத் தங்கையே, அவற்றுள் ஒவ்வொன்றும் இப்போது என் நினைவிற்கு வந்துகொண்டிருக்கின்றது. அதைக் குறித்துச் சிறிது பேசியேனும் இத்துயர இரவைக் கழிக்கலாமென நினைக்கிறேன்: சந்திரன், பூமி, சூரியன் முதலியன கோளங்கள். மற்ற இரண்டைக்காட்டிலும் சூரிய கோளம் பெரிது. பூமி தானே சுழல்வது மாத்திரமேயன்றிச் சூரியனையும் சுற்றி வருகிறது. இதற்கு ஒரு வருடமாகிறது. இப்

பூமியைச் சந்திரன் ஒரு முறை சுற்றி வர ஏறக்குறைய ஒருமாதமாம். அமாவாசையும், பௌர்ணமியும் உண்டாவதற்குக் காரணம் இதுவே. சூரியன் தானே சுழல்வது. நமக்குக் காணப்படுகின்ற கோளங்களுள் ஒவ்வொன்றும் சுழன்றுகொண்டே இருக்கின்றது. இவைகள் அந்தரத்திலிருப்பினும் இயற்கை வசீகர வன்மையால் ஒன்றையொன்று சங்கிலிபோன்று பிடித்திழுத்துக்கொண்டிருக்கின்றன. அங்ஙனமின்றேல், ஒன்றோடொன்று மோதி என்றோ அழிந்துபோயிருக்கும்! சூரியனைக்காட்டிலும் பெரிய கோளங்களும் அநேகம் உள்ளன. அவைகள் ஆதித்தனைக்காட்டிலும் அதி தூரத்தில் இருத்தலின், அவை நமக்குச் சிறு நட்சத்திரங்களைப்போன்று தெரிகின்றன. அவற்றின் ஒளி பாய்வதைக்கொண்டே அவற்றின் அளவை வரையறுக்கின்றார்கள் வான தத்துவ சாஸ்திரிகள். சூரியன் உதித்த எட்டு நிமிடங்கள் கழித்தே அவ்வொளி நம் பூமியின்மாட்டுப் பாய்கிறது. உதித்த நான்கரை வருடங்கள் கழிந்து நமக்கு ஒளி தெரிகிற கிரகங்களும் உண்டு. ஒளி ஒரு நிமிடத்தில் இத்தனை மைல் பிரயாணஞ் செய்கிறதென வரையறுத்திருத்தலின், பகலவன் ஒளி எட்டு நிமிடங்களுக்குப் பின் வந்து பாயும் நம் பூமிக்கும் சூரியனுக்கும் உள்ள இடை வெளி இத்தனை மைல்கள் என்பது தீர்மானிக்கப்பட்டுள்ளது. அக்கோளங்களில் சந்திரனும் ஒன்று. மதிக்குத் தனக்கென இயற்கை ஒளியின்மையின், ஆதித்தனிடமிருந்து ஒளியைப் பெறுகிறது. பூமியும், சந்திரனும் சுற்றி வருகிற முறையில் சின்னாட்களில் சூரிய ஒளி சந்திரனது ஒவ்வொரு பிரிவில் படாதவாறு பூமி மறைக்கிறது. அப்போது

தான் சந்திரன் ஒவ்வொரு நாளும் சிறிது சிறிது மறைந்து காணப்படுகிறது. அதுவே தேய் பிறை என்றும், அம் மறைவு கொஞ்சங் கொஞ்சமாக விலகிக்கொண்டு வருங் கால் வளர்பிறை என்றும் பூகோள சாஸ்திரத்தில் கூறப் படுகின்றன. நம்மனோரில் சிலர் ஒருவர் சாபத்தினாலேதான் சந்திரன் தேய்ந்தும் வளர்ந்தும் வருகிறான் என இயம்பு கின்றனர். ஆனால், இது பூகோள சாஸ்திரத்தின் தன்மை விளங்காத சிறியவர்களுக்கும், கல்வியற்றவர்களுக்கும் நம் மனோர் கட்டி வைத்த ஒரு கற்பனைக்கதை என்பதை யான் அறிவேன். இதையுணராது நம் பூர்வ காலத்தினர் அறி வற்றவர் எனப் பழித்தல் பொருத்தமன்று.

**தங்கை:**—எனக்கும் இப்போதுநினைவிற்கு வருகிறது. இச்சந்திரன் நம் துயரத்தைக் காணப் பொறாது அப் போதைக்கப்போது மேகத்தில் மறைகின்றதைப் பாரும்! மேகங்கள் விரைந்து செல்வதனால் சந்திரன் தவழ்வது போலக் காணப்படுகின்றதல்லவா! இது நம் குறைகளை இறைவரிடஞ் செப்பப் போதரும் கருணையாளன்போலத் தோன்றுவதைக் காணீர்! நம்மனத்தில் துக்கமாசு பதிந் திருத்தல் போன்றே இதற்கும் மாசு ஒன்று பொருந்தி உள்ளது. இந்நிலவொளியில் இப்பறவைகள் எத்துணை அழகாகப் பாடுகின்றன! மரங்களின் இலைகள் எவ்வளவு மகிழ்வுடன் ஒன்றோடொன்று உராய்ந்தும் அசைந்தும் குலாவிக்கொண்டிருக்கின்றன! பெண்களின் பற்களைப் போன்ற முல்லைகளும், கண்களைப் போன்ற குமுதங்களும், உள்ளங்கைகளைப் போன்ற காந்தள்களும், அணிகளைப் போன்று பூத்துத் தொங்கும் கொன்றையும், முறையே நகைத்தும், இனிது நோக்கியும், அழகு பெற விரிந்

தும், ஒளிர்ந்தும் எத்துணை இன்பத்தை நுகர்ந்து கொண்டிருக்கின்றன ! காறும், அருவிகளும் சிறி தும் கலக்கமின்றிக் களிப்புடன் பாய்வதைப் பாரும் ! அணில்கள் என்ன ஆனந்தமாக மரங்களில் மேலேறு வதும், இறங்குவதும், கீச்சுக்கீச்செனக் கத்துவதுமாயுள் ளன ! மந்திகள் மரத்திற்கு மரம் தாவி மகிழ்கின்றன ! இம்முழு மதியில் துன்பத்தை அனுபவிக்கின்றவர் நம்மைத் தவிர மற்றொருவருமில்லை எனவே கூறல் வேண்டும். அந்தோ ! நமக்கிருக்கும் வருத்தம் அவைகளுக்கென்ன தெரியும் ! நாம் மிக்க மகிழ்வுடனிருக்கின்றோமென்று தானே அவைகள் நினைக்கும் ! அவற்றில் ஒன்றாகவேனும் பிறக்க நாம் புண்ணியம் இழைத்திலோமே ! அங்ஙன மாயின், ஐயோ ! இக்கொடுந்துயரம் நம்மை அணுகி இராதே ! இப்போது கூட இவற்றில் ஒன்றாக யாம் மாறும்படி இறைவர் அருள் புரியின் மிக்க நலமாகும். இருக்க இடமின்றியும், உண்ண உணவின்றியும் எத்தனை நாட்களுக்கு நாம் இவ்வுலகில் உழல்வது ! தூக்கணாங் குருவிக்கேனும் அழகாகக் கூடமைத்து வாழத்தெரிந்துள் ளது. பறக்கும் பறவைகளுக்கேனும் வதிவதற்கோர் இடமுளது. இப்பரந்த உலகில் அச்சிறு இடத்தையும் பெறாத நம் துயரை என்னென்றியம்புவது !

**தமக்கை** :—நம் துயர நிலைமையையும் இறைவர் நன்கு உணர்வர் ! நம்மை நல்வழிப்படுத்தல் அவர் பொறுப்பல்லவா ? அவரைக் கேட்கவேனும், நம்மை நாம் காத்துக்கொள்ளவேனும் நமக்கு என்ன உரிமையுள்ளது ? நம் உடலும் உயிரும் அவருடையவையல்லவா ? அவர் அருளை எதிர் பார்த்திருத்தலே நம் கடமையாகும் ! இனி

நம்மைப்பற்றி நாம் வருந்துதல் அறியாமையே. எல்லாம் அவர் அருள்படி நடக்கட்டும்.

**தங்கை:**—நீர் கூறியயாவும் உண்மையே. நம்பொறுப்புகள் யாவும் இறைவரைச் சார்ந்தனவே. நாம் கவலையுறுவதில் பயனின்று. ஆயினும், இத்துன்பத்தையும், வறுமையையும் பொறுத்தல் யாங்ஙனம்! இத்துணைத் தீவினையை இழைத்தவர் உலகில் ஒருவரும் இரார் எனவே நினைக்கின்றேன். நம் விதியை என்னென்போம்! யாரிடங் கூறுவோம்! மலை போன்ற செல்வம் மாண்டதே!

**தமக்கை:**—செல்வம் செல்லுந் தன்மை உடையதன்றோ! எந்தச் சக்கரவர்த்தியேனும் என்றும் ஒரே நிலைமையில் இருந்ததை நீ எந்நூலிலேனும் படித்துள்ளனையா? கலைமகளைப் போன்று திருமகள் ஒரே இடத்தில் வாழ இசைவதில்லையே! குன்றத்தனை இரு நிதியைப் படைத்தோனும் ஒரு பகலிலேயே இரவலனுயினும் ஆவனன்றோ! செல்வம் சகடக்கால் போன்று சுழலுந்தன்மை உடையதுதானே! வறுமையும், செம்மையும் மாறி மாறி வருதல் உலக இயற்கை. இதைக் குறித்து யான் சிறிதும் கவலுகின்றேனில்லை.

**தங்கை:**—நிலையற்ற செல்வம் எங்ஙனமேனும் ஒழிக. அற்றைத் திங்களில் வெண்ணிலவில் நிலா முற்றத்தில் நம் அழகிய பறம்புக் குன்றில் நம் அருமைத் தந்தையாரோடு இன்பமாகக் காலங் கழித்த நாம், இற்றைத் திங்களில் தந்தையாரையும் இழந்து, நாட்டையும் விட்டுத் துன்புறுகின்றோமே!

இவ்வார்த்தை தமக்கையாரின் மனத்தை உருக்கிற்று. ஆகவே, அவர் இருவரும்,

“ அற்றைத் திங்க ளவ்வெண் ணிலவின்
எந்தையு முடையோம் எங்குன்றும் பிறர்கோளார்
இற்றைத் திங்கள் இவ்வெண் ணிலவின்
வென்றெறி முரசின் வேந்தரெங்
குன்றுங் கொண்டார்யா மெந்தையு மிலமே.”

எனக் கூறி, “ ஆ ! எங்கள் விதியே ! எம்மோடு விளையாடு தியோ ! சிறு பெண்களிடத்தில் உனக்கென்ன வேறு பாடு ? யாங்கள் உனக்கென்ன தீங்கிழைத்தோம் ? எல் லாம் தீவினையே ஆகும். ஆயினும், இறைவர் நம்மை இங் ஙனமே விடமாட்டார்; ஏதேனும் நன்மை ஒன்றைப் புரிவார். அவரே நமக்குத் துணை,” எனச் சிறிது மனந் தெளிந்தனர். உடனே உறக்கத் தேவதை அச்சகோதரி மார்களை ஆட்கொண்டது.

மறு நாள் காலையிலெழுந்து மூவரும் வழி நடக்க லாயினர். செல்லும் நெறியில் பல முனிவர்களின் பர்ண சாலைகளும், தவசிகளின் இருப்பிடங்களும், தெய்வக் கோட்டங்களும், இயற்கைப் பொருள்கள் பலவும் காணப் பட்டன. கபிலர் அவைகளைப் பற்றிய குறிப்புகள் சில வற்றை அவர்களுக்குக் கூறிக்கொண்டே சென்றனர். ஆங்காங்குள்ள மணல் திட்டைகளும், குறுஞ்செடிகளும், அவண் நிரை நிரையாய் மேயும் ஆடுமாடுகளின் சுயேச்சை யும், கவலை சிறிதுமின்றி மர நிழலில் படுத்து அண்ணாந்து வானத்தைப் பார்த்துக்கொண்டும் சிறு பாடல்களைப் பாடிக்கொண்டுமிருக்கும் இடைச்சிறுரின் மன உல்லாச மும், வானத்தை அளாவிய மலைகளும், முத்தாரங்களைப் போன்றும் வெள்ளியை உருக்கிவிட்டதைப் போன்றும்

அவற்றினின்றிழிந்து வருகின்ற அருவிகளும், அவை கீழுள்ள பள்ளங்களில் பாயும்போதுண்டாகும் ஓசையும், ஆழ்ந்த சிந்தனையுடையார் நெஞ்சம் போன்ற சுனைகளும் அவர்கள் நெஞ்சைக் கவர்ந்தன. கனிந்த கனிகள் பல, பற்றற்றவர்கள் போன்று மரங்களின் கிளைகளிலிருந்து அற்றுத் தாமாகவே விழுந்தன. மலர்ப் பள்ளியென எங்கும் புஷ்பங்கள் உதிர்ந்து கிடந்தன. களிறுகள் அருவி நீரைத் தங்கள் துதிக்கைகளால் முகந்து தங்கள் பிடிகளின் வாய்களில் விட்டன. யானைக் கன்றுகள் தாய்களை விடாமற் பின் சென்றன. தூக்கணங் குருவிகளால் மரக்கிளைகளில் கட்டப்பட்ட கூடுகள் வௌவாலைப் போன்று தலை கீழாகத் தொங்கிக்கொண்டிருந்தன. குயில் முட்டைகளைக் காகங்கள் தங்களுடையன எனக் கருதித் தங்கள் கூட்டில் கொண்டுபோய்ச் சேர்த்துக்கொண்டிருந்தன.

ஓங்கிய செந்நெற்களின் இடையில் பருத்த கயல் மீன்கள் செல்ல வழியின்றிப் புரண்டன. அவணுற்ற அழகிய குவளைப் போதில் வரி வண்டுகள் தேனுண்டு உறங்கும் காட்சி, அறுசுவையோடும் உண்ட ஓர் அரசி தன் பஞ்சணையில் படுத்துறங்குவதுபோன்றிருந்தது. இன்னணமாகிய இயற்கைத் தோற்றங்கள் பல அவர்கள் துயரைச் சிறிது மாற்றின.

அம்மகளிரை அழைத்துச் சென்ற கபிலர், நாடுகள் பல கடந்து, மகத நாடு என வழங்கும் வச்சிர நாட்டில் அரசு செலுத்திய இளவிச்சிக்கோ என்னும் சிற்றரசனிடம் சென்றனர். அவன் வேளிர் குலத்தைச் சார்ந்தவன். அவன் பெரியோராகிய கபிலரைக் கண்டவுடன் மிக்க பணிவுடன் வரவேற்றனன்.

அவனுடைய நல்வரவேற்பையும் வணக்கத்தையுங் கண்ட கபிலர், "பகைவரின் நிணத்தையே உணவாகக் கொண்ட வேல் தாங்கிய வீரனே, முகிலும் நடுவிடத்தை அன்றி அறியா உயர்ந்த மலையையும், இனிய பலா மரத் தோப்பையும், போரில் பின்னடையாப் புய வலியையும் உடைய விச்சிக்கோவே, உன்னைக் காணவே யான் இவண் போந்தனன். நாங்கள் உன் நகரை அடையப் பல நாட்கள் வழி நடந்திளைத்தோம். என்னுடன் போந்துள்ள இவ்விரு மங்கையரும், தன் குறையைப் பிறருக்கு அறிவிக்கும் வன்மையற்ற முல்லைக் கொடிக்குத் தன் மணித்தேரை ஈந்த வள்ளல் பெருந்தகையான பாரியின் மகளிர். இம்மகளிர் இல்லறத்தை இனிமையுற நடாத்தும் இயல்புடையர். கணவன் குறிப்பறியும் கண்ணியம் இவர்பாலுண்டு. கல்வித் திறனும், அறிவு மாட்சியும் இவர்களிடம் அடிமை கொண்டுள்ளன. பொருளழகு தொடையழகு பொருந்தக் கவி பாடுதலில் இவர்கள் சிறந்தவர்கள். இம்மங்கையர் அமைச்சரென விஷயங்களை ஆராய்ந்துரைக்கும் ஆற்றல் வாய்ந்தவர்; ஒழுக்க அடக்கங்களில் ஒப்பற்றவர். இவர்கள் மனம் உயரிய எண்ணங்களையே எண்ணும்; பயனில் சொற்களை வாய் பகரா; தமக்குரிமையற்றவைகளைக் கண்கள் நோக்கா; தீய காரியங்களை உடல் புரியா. ஓரிமைப் போதையும் பயன் பெறச் செய்யும் பண்பு இவர்களுக்குண்டு. தீச்சொற்களும், தீக்குணங்களும் இவர்களைக் கண்டஞ்சி ஓடும். யானோ, அந்தணர் வகுப்பிற்றோன்றியவன். பாரியார்க்கு உயிர்த்தோழன்; இம்மங்கையர்க்கு அருங்கல்விச் செல்வத்தையும், கவிப்புலமையையும் ஈந்த

ஆசிரியன் ; அவரவர்களுக்கேற்றவாறு புகழ்ந்து பாடும் சொற்புலமையுமுடையேன். நீயோ, செல்வ வளத்துடன் எத்தகைய வீரரையும் முதுகிட்டோடச் செய்யும் போர் முறையையும், திறமையையும் அடைந்துள்ளாய். ஆதலின், யான் உனக்குத் தரும் பொருள் ஒன்றை மறுக்காது ஏற்றுக்கொள்வாயாக," என்றனர்.

இவ்வார்த்தைகளைச் செவியேற்ற இளவிச்சிக்கோ, அவர் தனக்குத் தரும் பொருள் அப்பெண்களே என்பதை நன்குணர்ந்தனன். கபிலர் வார்த்தையை மறுப்பதிலேனும், அப்பெண்களைப் புறக்கணிப்பதிலேனும் அவனுக்குச் சிறிதும் மனமிசைந்திலது. ஆயினும், மூவேந்தர்க்காக அவன் பெரிதும் அஞ்சினன். அவர்களுக்குப் பகைவரான பாரியாரின் புதல்விகளைத் தான் மணப்பின் அவர்களால் தனக்கு என்ன கெடுதி நேரிடுமோ என்பதுதான் அவன் கவலை. ஆதலால், அவன் கபிலரை வணங்கி, அம்மகளிரைத் தான் மணந்துகொள்ள இயலாத நிலையிலிருப்பதைப் பணிவுடன் தெரிவித்துக் கொண்டனன்.

"இவன் இயம்பியதும் ஒரு வகையில் உண்மையே. ஆனால், இவன் வன்மையுடையனாயின், இதற்கு அஞ்சான்," எனக் கபிலர் கருதினர் ; பின்பு, "இப்போது யாம் போமிடம் யாது?" எனச் சிறிது சிந்தித்தனர். உடனே கொடையிற் சிறந்த இருங்கோவேளும் அவன் அரைய நகரும் அவர் நினைவிற்குத் தோன்றின ; உடனே அம்மகளிரை அழைத்துக்கொண்டு அவனுழைச் சென்றனர். அவனும் முறையோடு அவரை வரவேற்றான். அவன் வள்ளற்றன்மையையும், வன்மையையும்,

பொன் தரும் அவன் மலை நாட்டையும், வில் வீரத்தையும் புலவர் பெரிதும் புகழ்ந்தனர். வளமிகுந்த பறம்பு நாட்டின் சிறப்பையும், தொலைவில் புகழ்படைத்த பாரியாரின் வள்ளற்றன்மையையும் அவர் வாய் அவனுக்கு வழங்கிற்று: "வெற்றிப் போரை விரும்பி ஏற்கும் கொற்றவ, இம்மகளிர் முந்நூறு ஊர்களையுடைய தன் பறம்பு நாடு முழுமையையும் ஆதுலர்க்கீந்து மகிழ்ந்தவனும், தன் அழகிய தேரை முல்லைக் கொடிக்கென நிறுத்தி நடந்து இல்லஞ் சேர்ந்த கருணை வள்ளலுமாகிய பாரியின் புதல்வியர். துவரா பதியைப் படை வீடாகக் கொண்டு நாற்பத்தொன்பது தலை முறையாகக் கொடையில் விருப்புடையராய் வாழும் வேளிர் குலத்திற்றோன்றிய கோவே, தாரணிந்த யானைப் படையையுடையவனே, ஆண் தன்மை வாய்ந்த பெரும, பாணர்க்குதவும் பண்பு வாய்ந்தவனே, இம்மகளிர் அறிவு நூல்கள் பலவற்றையுங் கற்றுத் துறை போயவர். கற்றபடி நின்றொழுகும் கண்ணியம் இவர்கள் பாலுண்டு. ஒவ்வொன்றையும் நுணுகி ஆராயும் நுட்ப மதி இவர்களுக்கே உரியது. இவ்விருவரும் செந்தமிழ்ப் புலமை வாய்ந்த தெள்ளியர்; சீரிய பண்பமைந்த செல்வியர்; இயற்கைத் தோற்றங்களின் இயல்புணர்ந்து பாடும் இன்கவிஞர்; வள்ளல் மரபில் தோன்றிய வண்மையாளர். ஆதலின், வண்மை வாய்ந்த நீ இவர்களை மணத்தல் பொருத்தமாகும்," என இயம்பினர். அவனும் மூவேந்தர்க்கஞ்சி அப்பெண்களை மணக்க மறுத்தனன்.

"ஆள்வினையுடைமையாற் பெரிதும் பொருளும் புகழும் திரட்டி வாழும் இருங்கோவேளே, வேடுவரால் துரத்தப்பட்ட காட்டுப்பசு அஞ்சியோடுங்கால், மணிகள் மேற்

கிளம்பி ஒளிரும் மலைச்சாரலை உடையது உம் பழையநாடு. பொய்யில் புலவர் கழாஅத்தலையார், அரசனைப் புகழ்ந்த செய்யுளுடன் உம் நாடு வர, உம் குலத்தரசன் ஒருவன் அவரை அவமதித்தனன். அளவிறந்த பொன்னையளித்து உம் மூதோரை உயர் நிலையில் நிறுத்திய உம் அரசு இப் போதுள்ள தாழ்மையை எய்தியதற்குக்காரணம் அதுவே. இது நிற்க. மூவேந்தருக்கு அஞ்சியே நீ இப்பாவையரை மணக்க மறுக்கின்றனை என்பதை யானறிவேன். இவர் பாரி மகளிர் எனச் செப்பியது என் அறியாமையே ஆகும்; உண்மை புகல்வது உசிதமெனக் கருதினேன். வாய்மைக்கு என்றும் பழுதுண்டாகாது. இஃது எங்ஙன மாயினுமாகுக. இனி எதையும் ஆய்ந்து இயற்றுதற்கு நீ முயல்வாயாக. 'பண்டு மழையைப் பெய்தோம்; நெல்லை விளைவித்தோம்,' எனக் கருதி வானமும் விளை நிலனும் பின் தம் தொழிலை இயற்றொழியின், உலகம் வாடு மன்றோ! அங்ஙனமே அரசரும் ஒருகால் பரிசிலர்க்கு மிகுதியும் ஈந்தோமென, எம் போல்வார் ஒன்றை விரும்புங்கால் கொடாதொழியின், அவர் செயல் இன்னலைத் தருவதாகும். சான்றோர் வறுமை அடையுங் கால் தமக்காக வருந்தார். இரப்பவர் இன்முகங் காண இயலாமையே அவரைப் பெரிதும் துன்புறுத்தும். அர சர் நாட்டை ஒருகால் பகைவர் கொள்ளக்கூடும். ஆதலின், நாடு தம்முடையதாக இருக்கும் போதே பாணர்க்கு ஈதலைக் கடனாகக் கொள்ளல் வேண்டும்,'' எனக் கபிலர் அவனுக்கு அறிவுரை கூறி, அவண் விட்டகன்றனர்.

ஆனால், அவர் மனம் பெரிதும் வருந்திற்று. "அந்தோ! என் செய்வேன்! புலவர் மனத்தை வருத்தல்

கூடாதென்பதை இன்னோர் அறிந்திலரே! ஈதெங்ஙன மாயினும், ஆகுக. பெண்களின் பெருமையை உலகம் எப்போதுதான் உணரும்! ஆதரவற்றவர் எவரேனும், அவரைக் காத்தல் அரசர் கடமையன்றோ! அதினும், பெண்மகளிர் விஷயத்தில் அவர் எத்துணைக் கருணையைக் காட்டல் வேண்டும்! பெண்ணென்னில் பேயும் இரங்கு மென்பரே! அவ்விரக்கங்கூட மக்களைக் காக்கும் மன்ன ரிடம் கண்டிலனே! உலகமே தன்னலச் சகடத்தாலன்றோ நடைபெறுகிறது! பிறர் துயரைத் தமதெனக் கருதும் பெருந்தகையாளர் எங்குளரோ! அறியேன்! அரசர்தம் அருளும் உரமும் இருந்தவாறு என்னே! எல்லாம் வெறு மயக்கே!'' எனப் பலவாறு சிந்தித்துக்கொண்டே அவணை விட்டு அகன்றனர்.

அவ்வரசர்களின் மறுப்புகள் நம் பெண் மணிகளின் நெஞ்சில் அம்பெனப் பாய்ந்தன. பெற்றோரை இழந்த துக்கத்தைக்காட்டிலும் இஃது அவர்களைப் பெரிதும் வருத்திற்று. "ஏன் இப்பெரியார் ஒவ்வொருவரையும் கெஞ்சுகின்றனர்! தம்மிடம் உள்ள அற்பப்பொருளை யேனும் பிறரிடஞ் சென்று விலை பகரல் இழிவன்றோ! அங்ஙனம் நாம் அஃறிணைப்பொருளுமல்லவே! பகுத் தறிவு பெற்ற மக்கள்; மிகுமென்மை வாய்ந்த பெண்கள். நம்மையா இங்ஙனம் விலைகூறுவது! இவர் நம்மை மணக்கு மாறு இயம்பலும், அவர்கள் முன்பின் நோக்காது மறுத் தலும், அதற்கு நாணுமல் நாம் உயிர் பிழைத்திருத்தலும் மிக அழகியன! சிறிது உணவு தந்து நம்மைக் காக்க இவ ரால் இயலாதா! அறிவிற் சிறந்த இப்புலவருக்கு நாம் ஒரு சுமையா! வரும் வழியில் எத்தனை சோலைகள் காணப்

யட்டன! அங்கு நாம் தங்குவதற்கு இடமும், உண்பதற்குக் கனியும், பருகுவதற்கு நீரும் கிடையாவோ! கல்லுக்குள் தேரைக்கும் உணவளிக்கும் இறை நம்மைக் கைவிடுவனு! அங்ஙனம் சோலைகளில் கற்றறிந்த இப்புலவருடன் நாம் வதியின் நம் போது எவ்வளவு பயனுற்றதாகக் கழியும்! மனத்தூய்மையுடன் இறைவனை வழுத்திக்கொண்டு நாம் காலங் கழிக்கலாமன்றோ! இஃது எத்துணைச் சிறப்புடைத்து! இறைவனை இறைஞ்சுதற்கும் இஃதொரு தக்க வழியாகுமே! இவ்வுலகில் இதனினும் இன்பம் வேறுளதோ! தவசிகள், சான்றோர், துறவிகள், அறவோர் இவர்களைக் கண்டு ஆனந்தமடைதற்கும், இவர்கள் நல்லுரைகளைப் பெறுதற்கும் இஃது எவ்வளவு மேலான வழி! இயற்கைப் பொருள்களூடே இறையைக் கண்டு கண்டு நாம் மகிழலாமே! இப்புலவருக்கும் அவ்வாழ்க்கை இனிமையைத் தருமல்லவா! இவர் நாடுகின்ற அரசச்செல்வமும், இல்வாழ்க்கையும் நிலையுள்ளனவா! நம் தந்தையாரின் நிலையற்ற தன்மையைக் கண்கூடாகக் கண்ட இவரும் இதற்கு விழைகின்றனரே! இதற்கு உண்மைக் காரணந்தான் யாதோ! இவற்றின் பொருளுணர நம்மாற்றான் இயலவில்லை போலும்! எங்ஙனமேனும் இவர் சிறந்த புலவரல்லரோ! காரணமின்றிக் காரியம் ஒன்றைச் செய்ய இவர் ஒருப்படுவரா! "மங்கையர் மன வன்மையற்றவர்; தம்மைத் தாம் கற்பு நிலையில் நின்று காத்துக்கொள்ளல் இவர்களுக்கியலாது; ஒருவர் காவலிலேயே எப்போதும் இருத்தல் வேண்டும்; அங்ஙனம் பாதுகாக்க நம்மைவிட வேறொருவரையும் இம்மங்கையர் பெற்றிலர்; நம் வாழ்நாட்களுக்குப் பின் இவ்வனிதையர் யார் ஆதரவில் இருக்

கக்கூடும்! அவ்வமயம் ஆதரவற்ற கொடி போன்றன்றோ அலையநேரும்! ஓரறிவு வாய்ந்த முல்லைக்கொடிக்கும் மணித் தேரீந்த பெருந்தகையின் மகளிரையா யாம் இங்ஙனம் அலைய விடுவது! ஆதலின், யாரிடத்தேனும் இப்பெண் டிரைச் சார வைத்தே யாம் செல்லல் வேண்டும்,'' என நினைக்கின்றனரோ! சீ. சீ! அங்ஙனமிராது. அவ்வாறு புலவர் நினைத்திருப்பரேல், அவ்விஷயத்தில் இவருக்கு ஆழ்ந்த ஆராய்ச்சி இல்லை என்றுதான் கூறல் வேண்டும். மங்கையருக்குத் தம்மனக் காவலைத்தவிர மற்றக்காவல்கள் பயனற்றன. மனத் திடமுற்றோர் மற்றக் காவல்களைப் பெறாமலிருப்பினும் உயர்வுறுவதும், அங்ஙனமற்றோர் காவல்கள் பல பெற்றிருப்பினும் தாழ்வுறுவதும் கண்கூடு. ஓரறிவுயிர்களுக்கும், ஐயறிவோடு பகுத்தறிவும் வாய்ந்த மக்களுக்கும் வேறுபாடுண்டல்லவா! அதினும், இருபாலா ரிலும் பெண் மக்களே மனத்திட்பம் வாய்ந்தவர்கள் என உயர்ந்தோர் கூறுவரே! நமக்கு இப்பெரியார் பயில்வித்த கல்வியின் ஆதரவில்லையா! அஃது ஓர் உரிய தோழமை அன்றோ! அதனினும் பிரியா உயிர் நட்பு வேறு யாது! அதன் ஆதரவைக்கொண்டு நாம் கரையேறல் முடியாதா! இவைகள் அற்ப அறிவு வாய்ந்த நமக்கே புலனாகும்போது இப்பெரியாருக்குத் தோற்றாமலிருக்கக் காரணம் இல்லை.

"அன்றி, 'மங்கையரை மணமின்றிக் கன்னிகைகளா கவே வைத்திருத்தல் தகுதியன்று. இவர்களைத் தக்க வசதி யுடன் ஓரிடத்திலே வைத்துக் காக்கவும் நமக்குப்போதிய பொருளில்லை. அதன் பொருட்டு நாம் செல்லும் பல இடங்களுக்கும் இவர்களை அழைத்துப் போதல் நேரும். இவ்விளம்பெண்களை நம் வசத்தில் இருத்துவதும் உலக

வசைக்கு ஏதுவாகும். ஆதலின், எத்தகையோருக் கேனும் தொலைத்துவிடலே உத்தமம்,' எனக் கருதுகின் றனரோ! அங்ஙனமுமிராது. நம் தமிழ்நாட்டுப் பெண்களில் பல்லோர் கன்னியராகவும், சந்நியாசினிகளாகவும், ஆங் காங்குச்சென்று தம் புலமையைக் காட்டிப் பரிசில்களையும் புகழையும் பெறவில்லையா! நம் தமிழ் நாட்டில் இது புதிய வழக்கமன்றே! மணிமேகலையார், கவுந்தியடிகள், அவ் வையார் முதலியோர் எத்திறத்திலிருந்தனர்! பெண்களுக் குக் குற்றமற்ற சிறந்த துணைவர் தந்தையும், ஆசிரியரு மல்லரோ! கடவுளுக்கொப்பாகக் கொள்ளும் அவர்களைக் காட்டிலும் உயர் துணை உலகில் வேறுண்டோ! இஃதறியா மக்களும் மக்களா! இதையும் புலவர் நன்குணர்வர். ஆத லின், இதுவும் பெரியாரின் கருத்தாயிருத்தல் முடியாது.

"புலவர் கருத்து இதுவாகத்தான் இருக்க வேண்டு மெனப் புலப்படுகின்றது: 'இம்மங்கையரோ, வீரத்திலும், பெருந்தன்மையிலும், வள்ளற்றன்மையிலும் சிறந்த பாரி யின் புதல்வியர்; நம்மாட்டுக் கல்விப் புலமையையும், அறநூல் தேர்ச்சியையும் பெற்ற வனிதையர். இத்தகை யரை நற்குணங்கள் பலவும் அமைந்த அரசருக்கு மணம் புரிவியாவிடின், இம்மங்கையர் தந்தை சார்பாலடைந்த பெருந்தன்மைகளும், நம்பாற் பெற்ற நலன்களும் குடத்தி லிட்ட விளக்கெனப் பிறருக்குப் பயன்படாமற்போம். ஆதலின், விவாகம் புரியின் இவர்களுக்குத் தோன்றும் மக்கள் பல நற்பண்புகளைப் பெற்று உலகிற்கு உயர் விளக்குகளாய் ஒளிர்வார்கள். இரு பாலாரும் கற்றலும், ஒழுக்க முறையில் நிற்றலும் எதற்காக! கேவலம் பொரு ளீட்டுதற்கும், இன்பந் துய்த்தற்குமா! நன் மக்களை

ஈன்று உலக நிலையை உயர்த்தவன்றோ!' என இவர் கருது கின்றனர் போலும்!

"இவர் இங்ஙனம் ஓர் உயரிய எண்ணத்தைக் கொண் டிருப்பரேல், இதற்கு நாமும் உடன்பட வேண்டுபவர்களே. இதில் தக்க நியாயமிருக்க, நாம் எங்ஙனம் தடுக்கலாம்! தன்னலம் பாராட்டி இதை மறுத்தல் நமக்குத்தான் பொருத்தமாகுமா! இவரென்ன உலக அனுபவம் உணராதவரா! இவருக்கு நாம் சொல்ல வேண்டுவதும் ஒன் றுண்டோ!" எனப் பலவாறு சிந்தித்துக்கொண்டே புலவர் பின் வாளா சென்றனர்.

பின்னர்க் கபிலர் சென்று திருக்கோவலூர் அரைய ஞன மலையனைக் கண்டனர். அவன் அரசு ஆண்மை வாய்ந் தவன்; சமருக்கஞ்சாத் தறுகணாளன்; ஒவ்வொருவர் உத்தமக் குணங்களையும் நன்குணர்ந்தவன்; கருணை பூண் டவன்; கன்னியர் கண்ணியத்தில் மதிப்புக்கொண்டவன். பாரியார் பெருந்தன்மைகள் யாவும் அவனுக்குத்தெரியும். ஆதலின், அவனுழைச்சென்ற கபிலருக்கு இப்பெண்மணி களைப்பற்றி அதிகம் கூறவேண்டிய அவசியம் நேர்ந்திலது. கபிலரையும், கன்னியரையுங் கண்டவுடன், அம்மகளிர் இன்னார் என்பதையும் புலவர் தன்னிடம் போந்ததற்குக் காரணம் இன்னதென்பதையும் யூகித்துக்கொண்டனன் திருக்கோவலூர் மன்னன்.

அவன் இதைச் சிறிது சிந்தித்துப் பார்த்தான். தான் மேற்கொள்ள வேண்டிய கடமைகளில் இஃதும் ஒன்று என அவனுக்குத் தோன்றிற்று: "இவரோ, உயர்குடி மக ளிர்; பண்பிற் சிறந்த பாரியாரின் புதல்வியர்; கபிலரால் கல்வி ஊட்டப் பெற்றவர். இவைகள் யாவும் ஒரு புற

யிருக்க, துன்புற்ற ஒருவரைத் தாங்குதலே தரும மாகும்; மற்றவை ஆரவாரத் தன்மையுடையனவேயாகும். மூவேந்தர் செய்தது வஞ்சனை என்பதை யான் நன்கு உணர்வேன். இம்மகளிரில் ஒருத்தியை யான் மணப்பதால் வேந்தர் மூவரும் என்மாட்டுப் பகை பாராட்டலாம். அங்ஙனமே செய்யினும், யான் கவலேன். அதற்காக இவ்வாதரவற்ற பெண்களைக் கைவிடல் என்னாலியலாது. அஃது எட்டுணையும் பொருத்தமுமன்று. அஃதன்றியும், மறம் செல்லாது என்பது கண்கூடு. வஞ்சனையுடையார் ஒருகால் வெற்றி பெறினும், மறு முறை தோல்வியுறல் திண்ணம்,'' எனக் கருதி, அம்மலையரையன் பாரியாரின் மூத்த மகளாராகிய சங்கவையாரை விதியின்படி மணம் புரியத் தீர்மானித்தான்.

இது கபிலரின் மனத்திற்குப் பெரிதும் ஆறுதலை அளித்தது. ஒருவருக்கு வழி ஏற்படின், மற்றொருவருக்கும் நன்மை கூடிய விரைவில் உண்டாகும் என்பது அவர் உறுதி. இம்மணம் அரசர் பலருக்கும் தெரிவிக்கப்பட்டது. யாவரும் திருக்கோவலூர் வந்து குழுமினர். பணியாளர் நாட்டை அலங்கரித்தனர். மணவினைகள் முறையே நடந்தேறின. வயது சென்ற பெண்டிர் மங்களம் பாடினர். சான்றோரின் ஆசி மணவறையை நிரப்பியது. வந்தவர் யாவரும் உண்டு களித்தனர். இம்முறையில் நம் அரும்புலமைச் செல்வியாராகிய சங்கவையாரின் மணம் சிறப்புடன் நடந்தேறிற்று.

மணத்திற்கு வந்தவர்களிற் சிலர், "அந்தோ! பாரியார் உயிருடன் இருப்பின் இம்மணம் இங்கு நடைபெறுமா! என்ன கம்பீரம்! என்ன சீர்மை! எத்தனை

வரிசைகள்! எத்துணைச் சிறப்புகள் காணப்படும்! எவ்வளவு பெருமிதத்துடன் இம்மகள் மாப்பிள்ளை வீட்டிற்கு வருவள்! ஐயோ! இவ்விளம்பெண்கள் கதி என்னவாய் முடிந்தது! இது கொடுமையினுங் கொடுமையே! நமக்கே இத்துன்பந் தோன்றின், கபிலர் மனம் எங்ஙனம் கலங்கும்! பாவையர் நெஞ்சம் எவ்வாறு பதைக்கும்! என்ன செய்யலாம்! எல்லாம் ஊழின் உறுதியன்றோ! வண்டி ஓடத்திலும் ஓடம் வண்டியிலும் ஏறுதல் உலக இயல்புதானே!'' எனக் கூடிக் கூடிப் பேசிக்கொண்டனர்.

பின்பு கபிலர் உயிர் வாழ விருப்பற்றனர். ஆயினும், அங்கவையாரை எவரிடம் ஒப்படைக்கலாம் என்னும் சிந்தனை அவரைப் பெரிதும் வருத்தியது. "அடைக்கலப் பொருளைப் பாதுகாக்கும் முறையை நன்கு உணர்ந்தவர் மிகச்சிலரே. தம்மிடம் மற்றொருவர் அடைக்கலமாக வைக்கும் பொருளின் நேர்மையை முதலில் அறிதல் வேண்டும். பின்பு அப்பொருளைக் கண்ணுங் கருத்துமாகக் காக்கும் முறையையும், அதனால் உண்டாகும் பயனையும் தெளிதல் வேண்டும். பழிக்கும் பாவத்திற்கும் அஞ்சும் இயல்பு வாய்ந்தவரே இதற்கு ஏற்றவர். இக்காரியத்தைப் பிழையறச் செய்து முடிக்கும் வன்மை அத்தகையோருக்கே உண்டு. இப்படிப்பட்டவர் கிடைத்தல் யாங்ஙனம் இயலும்! என் செய்வேன்!'' எனப் பன்முறை ஆராய்ந்து நன்னெறியில் நின்ற அந்தணர்களிடம் அங்கவையாரை அடைக்கலமாக வைத்தனர்.

பின்பு அவர் மனச்சுமை கழிந்தது. "இனி இவ்வுலகில் நாம் இயற்ற வேண்டுவது யாதுமில்லை!'' எனக் கபிலர் தீர்மானித்தனர். பாரியார் தம்மை 'இவண் இரு' எனக்

கூறிச் சென்ற வார்த்தை அவரைப் பெரிதும் வருத்தியது. "யான் பாரிக்கு உரிய நட்பினனாய் இருந்திருப்பின், என்னை இங்ஙனம் நீக்கிச் செல்வனா! சில வழிகளில் அவன் என்னை வெறுத்திருந்தனன் போலும்!" எனப் பலவாறு சிந்தித்துப் பெண்ணை யாற்றின் இடையில் தீ வளர்த்து, "இப்பிறவியில் நாம் இருவரும் கலந்திருந்தது போன்றே மறு பிறவியிலும் கூடி உறவாட இறைவன் அருள் புரிவானாக," என்று கூறிக்கொண்டே கபிலர் தீக் குளித்தனர்.

என்ன நட்பு! என்ன நட்பு! எத்தகைய ஊன்றிய நட்பிருந்தால், அவர் தம் ஆருயிரைத் துறக்க ஒருப்படுவர்! அவர் கற்றுத்துறை போய பெரியார். உயிர்கள் உலகில் தோன்றியதன் காரணமும், அவற்றால் மக்கள் அடைய இருக்கும் பயன்களும் அவருக்கு நன்கு தெரியும். இறைவனளித்தருளிய அருமை உயிரைத் தாம் போக்கடித்துக் கொள்ளல் தகுதியற்றது என்பதை அவர் அறியாதவரல்லர். இதனால் ஏற்படும் இன்னல்களையும் உணர்வர். அச் சீரிய பெரியார் இக்காரியத்தில் நுழைந்தது யாவருக்கும் வியப்பைத் தருவதொன்றே! பாரியார் இவ்வுலக வாழ்க்கையை நீத்த அன்றே அவரும் அனு மரணம் அடைந்திருப்பர். ஆனால், பாரி மகளிர்மாட்டு அவருக்கிருந்த அன்பே அதைத் தடுத்தது. வேந்தர்க்கும் புலவர்க்கும் இருந்த நட்புரிமையே இதற்குக் காரணம். மகளிர் சுமை தம்மை விட்டு விலகிய பின், 'இனி நாம் இவ்வுலகில் இருந்தும் பயனில்லை. நற்காரியம் ஒன்றையும் இயற்ற நம் மனம் இடந்தருதல் அருமை. அவ்வாறு பயனற்று இருத்தலினும் இறத்தலே மாண்பு,' எனக்கருதினர் போலும்!

இதுதான் உயரிய நட்பாகும். மாந்தர் தம் நண்பருக்கு விலக்கவாற்ருத கேடு நேர்ந்துழி அத்துன்பத்தைத் தாமும் அனுபவித்தலன்ருே நட்பெனப்படுவது? அதைக் கபிலர் இயற்றிக் காட்டினர்.

## 11. அங்கவையார் திருமணம்

அந்தணர்களிடம் அடைக்கலம் புகுந்த அங்கவையார், தம் நிலைமைக்கும் அவர்கள் இயல்பிற்கும் ஏற்றவாறு நடந்துகொண்டனர். அவர் அவர்களிடம் ஒழுகி வந்த முறை, அவர் தாம் ஒரு பெரிய அரசருடைய புதல்விய ரென்பதையும், பல அறிவு நூற்களைக் கற்றுணர்ந்த புல மைச் செல்வியரென்பதையும் அறவே மறந்தது போலக் காணப்பட்டது. ஈதன்ருே அறிவுடைமை! காலத்திற் கும் இடத்திற்கும் ஏற்றவாறு தம்மைத்தாம் திருத்திக் கொள்ள வேண்டுமேயொழியத் தமக்கேற்ப அவை பொருந் தும் என நினைத்தல் அறியாமையே. அங்கவையார் அந் தணர்கள் பணியை அன்புடன் அழகாக இயற்றினர். குறிப்பறிந்தொழுகும் அவர் நீர்மை, கொண்டாடத் தக்க தாயிருந்தது. அவ்வம்மையாரால் அவ்வந்தணர்களுக்குப் பல விதத்தில் இன்பமேயன்றித் துன்பமில்லை. ஆதலால், அவர்களும் அவரைத் தங்கள் சொந்த மகளாரெனவே பாவித்து அன்பு பாராட்டினுர்கள். தம் துயரத்தை அவர் ஒரு நாளும் வெளிக்காட்டிலர். “இறைவன் எல்லா வற்றையும் நன்மைக்கே செய்வன். அவைகள் நமக்கு இப்போது தீமையுடையனவாகக் காணப்படினும், பின்பு நன்மையையே அளிக்கும்,” எனத் தீர்மானித்தவராய், அவர் தம் காலத்தை மிக்க பொறுமையுடன் கழித்து வந்தனர். இது நிற்க.

தமிழ் நாட்டில் அவ்வையாரைப் பற்றி உணராதார் ஒருவருமிலரெனவே கூறலாம். கற்கத் தொடங்கும் ஒவ்வொரு சிறுவர் சிறுமியரும் அவ்வையார் நூல்களில் உறவாடியே தீரவேண்டும். ஆத்தி சூடி, கொன்றை வேந்தன், மூதுரை முதலிய நூல்களைப் பயிலாத பள்ளிச் சிறுவரும் உளரோ! இம்முறையில் ஒவ்வொரு பாடசாலையிலும் அவ்வையார் குடி புகுந்துள்ளனர் எனக் கூறல் மிகையாகாது. அவர் தெய்வ அருளைப் பெரிதும்பெற்றவர். நீதி நூல்களை முறையே தொகுக்கும் வன்மை அவருக்கு வாய்ந்திருந்தது. நம் இளைஞர் பயிலும் சிறு சிறு நூல்களே அன்றி, புலவர் புகழும் பயனுடைய பாடல்களையும் அவர் வாய் வழங்கியுள்ளது. அவை அகநானூறு, புறநானூறு, நற்றிணை முதலியவற்றில் இடம்பெற்றிருக்கின்றன. தனிப்பாடல்களும் பல உண்டு. அவை புலவருக்கு விருந்தளித்துக் கற்றவர் அவையை அலங்கரிக்கின்றன. அவர் குறள் வெண்பாவில் யோக நூல் ஒன்று இயற்றியுள்ளார். மக்கள் யோகம் செய்து இறைவனை அடையும் முறையை அது தெள்ளிதின் உணர்த்துகின்றது; ஞானிகளுக்கும் யோகிகளுக்கும் அஃது உண்மையை உணர்த்தி ஊக்க மூட்டுகின்றது. இளைஞர்க்காக அவர் பாடியுள்ள பாக்களும் ஆழ்ந்த பொருள்களைத் தம்முள் அடக்கிக்கொண்டு மிளிர்கின்றன. அவர் தெய்வத்தன்மை வாய்ந்தவர் என்பது சான்றோர் கருத்து. இன்றேல், பல நூற்றாண்டுகளுக்குப் பின்னரும் அவர் புகழுடம்பு இத்துணைச் சிறப்புப் பெற்று உலவுவதற்கு இயலாது. அறிவுடையோர், அறிவற்றவர், ஆடவர், பெண்டிர், தமிழ் நாட்டார், பிற நாட்டார் ஆகிய யாவர் நெஞ்சிலும் இன்னும்

அவர் நிலவிக்கொண்டிருத்தலை நாம் காண்கின்றோம்; அவர் புலமையைப் புகழாத கல்வியாளரும், அஞ்சாத புலவரும் பெரும்பான்மையோரிலரெனவே இயம்பலாம். அவ்வையார் புலாலுடம்பு இவ்வுலகில் நடையாடாத இக் காலத்திலேயே அவர் சீர்மை இத்துணைத்தெனின், அவர் உயிருடன் வாழ்ந்த காலத்தைப் பற்றிக் கூறுதலும் வேண்டுமோ!

முடியுடைத் தமிழ் நாட்டு மன்னர் மூவரும் அவர் மாட்டுப் பெருமதிப்புக் காட்டி வந்தனர். அவர் வாக்குத் தெய்வ மொழி என்பது அவர்கள் கருத்து. அவர் கூறும் வசையையும் இசையையும் பெற்றோர், முறையே அவ்வப் பயனைத் துய்த்தலை அவர்கள் நன்கு உணர்ந்திருந்தார்கள். அக்காலத் தமிழுலகம் கேவலம் அவர்மாட்டு அஞ்சுதலை மாத்திரம் கொண்டிலது; பக்தியையும் அன்பையும் மதிப்பையும் வகித்திருந்தது. அவர் நடந்துகொண்ட முறையே இவற்றிற்குக் காரணம் எனல் மிகையாகாது. அவர் நடுவு நிலைமை தவறாதவர். உயர் குலத்தையும், பெருஞ்செல் வத்தையும் நோக்கிக் காரியஞ் செய்தல் அவர் அருகிலும் தலை காட்டிலது. மனத்தூய்மையை அன்றி, ஆரவாரத் தன்மையை அவர் விரும்பினார் இல்லை. தம்மை நாடினவர் களுக்கு உதவி புரிய அவர் நெஞ்சம் விழைந்து நிற்கும்; பொருளைப் புல்லென மதிப்பர். பொருளுக்குப் புலமையை விற்கும் புன்மை அவரிடம் அணுகிலது. எளிய வாழ்க் கையும், உயர்ந்த நோக்கங்களும் அவரிடம் குடி கொண் டிருந்தன. ஆடையினாலும், அணியினாலும் அவர் தம் புல மையை வெளிப்படுத்திக்கொள்ளவில்லை; செய்கையில் வெளிப்படுத்தவே அவர் முயன்றனர். புலமை வாய்ந்த

எளியவனையும் அவர் வாய் பாடும். அன்பு ஒன்றைத் தவிர வேறொன்றையும் அவர் மனம் விழைந்திலது. உண்மையைக் கூற ஒருபோதும் அவர் அஞ்சினாரல்லர். மன்னனாயினும், மாண்பற்ற தன்மையை வெளிப்படுத்தி அவனைத் திருத்த அவர் பின் வாங்கிலர். அவர் பாடல்கள் செருக்குடைய மன்னரைச் சிரங் குனியச் செய்யும் வன்மையுள்ளன. அவர் பயனற்ற ஒருவருக்கும் அஞ்சுதல் இல்லை; பொருள் பற்றையும், ஆரவாரத்தன்மையையும், ஒரு பால் சாய்தலையும் அவர் அறவே ஒழித்தனர். அற்ப உயிர்களிடத்தும் அவர் அன்பு சென்றது. அவர் எளிய வாழ்க்கையையும், சிறந்த கடவுள் பக்தியையும் மேற்கொண்டனர். ஆதலின், அவர் அஞ்ச வேண்டுவது ஒன்றும் இல்லாதொழிந்தது. அவர் தமிழ்த் தாய்க்குச் செல்வப் புதல்வியராய் விளங்கினர். அவரைத் தன் மடிமீதிருத்திக் கொஞ்சி விளையாடும் இன்பம் அப்பொழுது தமிழணங்குக்குவாய்த்திருந்தது. இத்தகைய மக்களையன்றோ தமிழ்த்தாய் எதிர் நோக்கி நிற்கின்றனள்! அவரைக் கலை மகள் அமிசம் எனக் கூறுவது இப்போதும் வழக்கில் இருந்து வருகிறது. ஆனால், அக்காலத்திலிருந்த புலவர்களில் சிற்சிலருக்கு மாத்திரம் அவர்மாட்டுப் பொறாமையுண்டு. அவர்களுக்கிருந்த பொருளாசையும், ஆரவாரத் தன்மையுமே அதற்குக் காரணமென்னலாம். பெருந்தன்மைவாய்ந்த புலவர் சிலர் அவருக்குப் பெருமை தாராமலில்லை.

புலவர் மாத்திரமல்லர்; அரசரும் அவ்வையாரைப் பெரிதும் விரும்பினர். அறிவில் முற்றுப்பெற்றார் புரிகின்ற தூது தொழிலையும் சில அரசர் அவருக்குக் கொடுத்திருந்தனர். தூதில் காரியங்களைக் குற்றமற இயற்றும்

வன்மை அவருக்கு அமைந்திருந்தது. அவர் சீர்மைகளை முற்றும் இயம்ப யாராலும் இயலாது. அவர் பரிசு பெறாத அரசரும், பெரியோரும் இல்லை எனவே கூறலாம். அவர் ஆசு கவி பாடுவதில் வல்லவர்; குற்றங்கடியும் குணமுடையவர். நீதிநூல்களிற் செப்பிய வண்ணஞ்செய்யும் தூய்மையர். இத்தகைய அவ்வையார் என்னும் சீமாட்டியார் ஒருவர் நம் தமிழ் நாட்டில் தோன்றவில்லையேல், பெண்களுக்கு இப்போதிருக்கும் புல்லிய மதிப்பில் ஆயிரத்தில் ஒரு பங்கு கிடைத்தலும் அருமையினுமருமையே.

அவ்வையார் ஒரு நாட்டரசரிடம் பரிசு பெற்று வரும் வழியில் மூவேந்தர் பாரியாருக்கு இழைத்த கொடுமையைக் கேட்டனர். பாரி மகளிருள் அங்கவையார் அந்தணரிடம் அடைக்கலம் புகுந்திருத்தலும் அவருக்குத் தெரிந்தது. அவர் மனந் துடித்தது; அனுதாபத்தினால் அவர் உடல் தளர்ந்தது! மூவேந்தர்மாட்டுச் சினம் மூண்டது; 'அந்தோ! வள்ளற்றன்மை வாய்ந்த பாரிக்கோ இங்ஙனம் நிகழ்தல் வேண்டும்! அவன் கல்வி நலனும், சான்றோர் மதிக்கும் பெருந்தகைமையும் எங்குப் போய் ஒளிந்தனவோ! அறக்கடவுளும் அவனை ஆதரிக்கவில்லையா! வள்ளல்களிற் சிறந்த அவன் வஞ்சனையாலா கொல்லப்படவேண்டும்! எக்குற்றத்தைக் கண்டு மூவேந்தர் அவனை அத்தீய படுகொலைக்கு ஆளாக்கினர்! அம்மன்னர் கொடியரினும் கொடியரே! ஈரம் என்பது அவர்கள் நெஞ்சில் இம்மியும் இல்லையோ! நற்குண சீலனை இவ்வாறு சதி செய்ய அவர்கள் மனம் எங்ஙனம் துணிந்ததோ! அவர்கள் வீரமே வீரம்! மன்னன் ஒருவனை வஞ்சனையால் வதைப்பதுதானோ யுத்த முறைமை! யுத்த நீதியில் அவர்கள்

தலை சிறந்தவர்கள் என்றுதான் கூற வேண்டும். அவர் களுக்குப் புத்தி புகட்டுகின்றவர் ஒருவருமிலரோ! வேந் தர் மூவரும் இதை மிக்க பெருமையென நினைத்தனர் போலும்! இதனால் ஏற்படும் இழிவை எண்ணிப் பார்த்தி லரோ! பாரியின்பால் வேந்தர் மூவருக்கும் பகை ஏற்பட்ட தற்குக் காரணந்தான் யாதாயிருக்கும்! பாரியோ, ஒருவ ரிடமும் பகைகொள்ளும் அற்ப குணத்தவனல்லன். ஒரு கால் மகளிர் விஷயமாகத்தான் இருக்க வேண்டும். வள்ள லின் மகளிரை மணக்க மூவேந்தரும் விரும்பியிருப்பர். அங்ஙனம் செய்யப் பாரி மறுத்திருப்பான். ஈகையின் இன் னலத்தைச் சிறிதும் உணராத அவர்களுக்குத் தன் மகளிரை மணமுடிக்க அவன் மனம இசையாமலிருக்க லாம். இதற்காகவா இத்தகைய படுகொலை! சீ! அவர்கள் கெட்டார்கள்! அற்பர்கள்! அவனையே உயிரெனக் கருதிய குடிகள் என்ன அலங்கோலப்பட்டார்களோ! அரசன் தந்தையும் குடிகள் மக்களும் என்பதைச் செயற்கையில் காட்டி வந்த அப்பறம்பு நாடு எந்நிலைமையிலுள்ளதோ! அவன் தருமக்கொடியை எங்குப் பிடுங்கி எறிந்தனரோ! இனி அக்கொடியை நாட்டிக் காப்பவர் யார்?

"கொழு கொம்பற்ற கொடி போன்ற அம்மகளிரின் மனம் எவ்வாறு தத்தளித்ததோ! என்னென்ன எண்ணங் கள் அம்மங்கையரின் மனத்தைக் கொள்ளை கொண்ட னவோ! சின்னஞ்சிறிய பெண்களின் நிலைமை இன்ன வாறு முடிந்தது! ஒருவரிடம் அடைக்கலம் புகவும் அவர் களுக்குக் காலம் நேர்ந்ததே! காலத்தின் கோலந்தான் என்னே! அருமை மகளிர் ஆதரிப்பவரின்றி என்ன துன் புற்றனரோ! கபிலர் நெஞ்சம் எவ்வாறு கலங்கிற்றோ!

அவர் உயிரைத் தாங்கி நின்றது அம்மகளிர்க்காகவே இருக்கும்! பெண்களுக்குச் செய்யவேண்டிய முறைகளைச் செய்து சென்றனரே! இஃதே அவர் பெருந்தன்மையைக் காட்டவில்லையா! செய்வன திருந்தச் செய்தலினு லன்றோ மானிடர் சான்றோரெனப் பேர் பெறுகின்றனர்! கபிலர் தம் கடமை முடியும் வரையும் ஆற்றொணாத்துய ரத்தை ஆற்றியிருந்ததுதான் வீரம். தாங்கள் எத்துணைத் துன்புறினும் பிறருக்கு நலஞ்செய்து முடித்தலன்றோ மேன் மக்களின் சிறந்த பண்பாகும்! அதைச் செய்கையிற் காட்டினர் கபிலர். இன்றேல், பாரியின் இல்லக் கிழத்தி நங்கையைப் போன்று அவர் அன்றே முடிந்திருப்பர். அவர் செய்தது பொருத்தமானதே; சான்றோர் புகழத் தக்கதே,'' என நினைத்துக்கொண்டே தளர்ந்த உட லோடும், சோர்ந்த மனத்தோடும் அவ்வையார் திருக் கோவலூரை நோக்கி நடந்தனர்.

அங்ஙனம் வழி நடக்குங்கால் அவ்வையார் பெரு மழையால் நனைந்து, துன்புற்று, அங்கவையார் தங்கி இருந்த அந்தணர் வீட்டை அடைந்தனர். குளிர் அவரை மிக வருத்திற்று. அவ்வையார் வருகை அங்கவையாருக்கு மகிழ்வை ஊட்டியது. ஆயினும், அவ்வையார் சோர்வும், குளிரும் அங்கவையாரைப் பெரிதும் வருத்தின. உடனே அவர் ஒரு துணியினால் மூதாட்டியார் உடல் ஈரத்தைத் துவட்டித் தீமூட்டிக் குளிர் நீக்கித் தம்மிடத்திருந்த நீலச் சிற்றுடை ஒன்றை அவருக்கு வழங்கி உபசரித்தனர். அவ்வையாரின் தெய்வத்தன்மையும், புலமையும், சிறப்பும் அம்மகளார் நன்கு உணர்வர். அவர் பெருந்தன்மைக் கேற்ற ஒன்றை அவர்க்கீதற்குத் தம்மிடம் ஒன்றும் இல்

லேயே என்பதுதான் அவருக்கிருந்த வருத்தம். புலவர் கருதியதை வரையாது கொடுத்துதவிய பாரியாரின் மகளி ரல்லரோ அவர்! இளமையிலிருந்தே வள்ளற்றன்மையில் வளர்ந்து பரிசிலர் தம்மைக் கேட்பினும் மறுக்காது தரும் வள்ளலாரைத் தந்தையராகப் பெற்ற நம் அன்னையார்க்கு இது பெருந்துன்பத்தை விளைக்காது என் செய்யும்! தம்மிடம் இரந்தவர்க்கு எத்துணை அரிய பொருளைத் தரி னும் அவர்கள் கீர்த்திக்கேற்ப ஒன்றும் தந்திலமே என இரங்கும் வள்ளல் மரபில் தோன்றிய நம் மகளார் தம் மிடமிருந்த சிற்றுடையொன்றை மனமார்ந்த அன்புடன் அவ்வையாருக்கு வழங்கியது தந்தையாரின் குணம் மக ளிருக்கும் பொருந்தும் என்னும் தத்துவத்தை நினைப் பூட்டுகிறது.

அதனையேற்ற அவ்வையாரின் மனம் குதுகலத்தினுல் நிரம்பியது. "மகளே, செல்வாக்கும், சீர்மையும் அறவே நீங்கி அந்தணர்பால் அடைக்கலம் புகுந்திருக்கும் இவ்வ மயத்திலும் என்ன ஈகை, என்ன ஈகை! ஈகை பிறவிக் குணம் என்பதை உன்பால் நன்குணர்ந்தேன். வள்ளி யோன் ஈன்ற செல்வியாகிய நீ உன் குலத்திற்கேற்ற செய் கையையே செய்தனை! ஈதன்றோ உண்மை வள்ளற்றன்மை எனப் பகர்வது! தக்க காலத்தில் எனக்கு ஈந்த இச்சிற் றுடைக்கு எதை ஒப்பிடுவது?

நான் ஒரு கால் உன் தந்தையினிடம் பரிசில் வேண் டிச் சென்றிருந்தேன். என் கூட்டுறவு அவனுக்குப் பெரி தும் இன்பத்தையூட்டியது. யான் அவணிருந்த நாட்களில் அவன் என்னோடு நூல்களின் நுட்பப் பொருள்களையும், கவித்திறன்களையுமே பேசிப் பேசி மகிழ்ந்து வந்தனன்.

அம்முறையில் அவனுக்கு என்னை விட்டுப் பிரிய மன மிசைந்திலது. ஆதலின், எனக்குப் பரிசில் தர அவன் நீட் டித்தனன். நாட்கள் பல கடந்த பிறகு யான் வேறிடஞ் செல்ல விழைவதைப் பாரிக்குத் தெரிவித்தேன். உண்மை யில் இஃது அப்பெரியானுக்கு விருப்பமில்லை என்றே கூறவேண்டும். ஆயினும், என்னை மறுக்க இயலாது அவன் பொன்கலன்கள் சிலவற்றைத் தந்து என்னைப் போகவிடுத் தது போன்று விடையளித்தனன்; பின்பு காவலர் சிலரை அனுப்பி, அக்கலன்களைப் பறிக்கச் செய்தனன். அதன் உண்மை அறியாத யான் அச்சீரியனிடம் சென்று முறை யிட்டபோது, அவன் முகம் சுளித்தலையும், களித்தலையும் கொண்டது. ஆனால், அதன் நுட்பம் அவ்வமயம் எனக் குப் புலனாகிலது. நூல் ஆராச்சியிலேயே எங்களுக்குப் பின்னும் சில நாட்கள் சென்றன. அதன் பிறகு, முன்னி னும் பன்மடங்கு பொன்னீந்து, அவன் என்னைப் போக விடுத்தனன்.

" இன்னொருகால் யான் பழயனூர் காரிபால் பரிசில் பெறச் சென்றேன். களையெடுக்கும் இடத்தில் நின்றிருந்த அவனுக்கு என் செல்கை பெரிதும் மகிழ்வையூட்டியது. என்னை உடனே போகவிட மனமிசையா அவன், " இக்க ளையைக் களைந்து பின்பு செல்லலாம் " எனக் களைக்கோலை என் கையிற்றந்தனன். அங்குக் கிளைத்திருந்த களையை எடுக்க அநேக நாட்கள் வேண்டியிருந்தன. அந்நாட்க ளில் அவன் என்மாட்டுப் பாராட்டிய அன்பை அளந்து கூற இயலாது.

" இன்னொருகால் சேரமான் அரண்மனையில் விருந்து ஒன்று நடந்தது. அதில் மற்றவருடன் இருந்து உண்ண

யானும் உட்கார்ந்தனன். பின்பு புதியனுக வந்த ஒருவனுக்கு உண்ண எங்கும் இடங் கிடைத்திலது. யாரை அவணிருந்து எழுப்புதல் எனச் சேரமான் சிறிது சிந்தித்தான். பந்தியிலிருந்து எழுப்பக்கூடிய உரிமையும், அன்பும் உடையார் என்னையன்றி அவனுக்கு வேறொருவரும் அங்குக் கிடைத்திலர். ஆதலின், என்னை நோக்கிப் பணிவுடன் 'இவண் வாராய்,' என அவன் விளித்தனன். அங்ஙனமே செய்த யான் பின்பு அவனுடன் இருந்து உண்டு மகிழ்ந்தேன். இம்மூன்று செய்கைகளும் அன்பினடியாகவே நிகழ்ந்தன. ஆயினும், சமயம் நோக்கி நீ அன்புடன் ஈந்த இச்சிற்றுடைக்கு இவற்றைத் தனித்தனியே ஒப்பிடுதல் ஒருகாலும் பொருந்தாது. காலத்தில் செய்த உதவி ஞாலத்தைக்காட்டினும் பெரிதன்றோ! துலாக்கோலின் ஒரு தட்டில் உன் அன்பையும் மற்றொரு தட்டில் அம் மூவர் அன்பையும் வைத்துத் தூக்கின் ஒருவாறு ஒப்பாகலாம்," எனக் கூறினர்; இக்கருத்தமைத்து,

> " பாரி பறித்த கலனும் பழையனூர்க்
> காரியன் றீந்த களைக்கோலுஞ்—சேரமான்
> வாரா யெனவுரைத்த வாய்மொழியு மிம்மூன்றும்
> நீலச்சிற் றுடைக்கு நேர்."

என்னும் பாடலையும் பாடினர்.

இஃது அங்கவையாரை மகிழச் செய்தது. அவ்வையாரின் பசி நோயைத் தீர்ப்பதற்கு, அவர் உயர்வுக்கேற்ற உணவு ஒன்றும் அங்கவையாருக்குக் கிடைத்திலது. நம் அன்னையார் வந்தோர் யாவருக்கும் உண்டி உடை கொடுத்துதவிய வள்ளல் மரபில் பிறந்தவர். ஈகையிலேயே

தவழ்ந்தவர்; விருந்தினரை உபசரித்தலேயே விளையாட்டாகக் கொண்டவர். அவ்வுயர் ஒழுக்கம் எங்ஙனம் அப்போது மாத்திரம் அவரைவிட்டு நீங்கக் கூடும்! அதினும் தம்மை நோக்கி வந்த அன்னையரோ யாவராலும் கொண்டாடப் பட்ட அவ்வையார்! புலமையிற் சிறந்தோர்! வயதில் மூத்தோர்! ஆதலின், அவரைப் பெரிதும் பெருமைப் படுத்த வேண்டுமென்பதே அங்கவையார் கருத்து. ஆயினும், தம் பண்பிற்கேற்ப அவ்வையாரை உபசரிக்க இயலாமையின், அவர் மனம் பெரிதும் வருந்திற்று. அவர் இன்னலம் பகல் விளக்குப் போன்று பயனற்றது. என் செய்வார் பாவம்! தம்மிடமிருந்த அற்ப உணவினாலேனும் அவ்வையாரை உபசரிக்க அவர் தீர்மானித்தனர்.

அவர் "அம்மையீர், பயனற்ற என்னைப் பொருட் படுத்தி இவண் எழுந்தருளிய உம்பெருந்தகைமை என்னே! உம் கண்ணோக்குப் பட்ட இன்றே யான் புனிதையானேன்! இனி எனக்கு இடையூறு ஏது! உம் வரவிற்கேற்ற புண்ணியத்தை யான் இழைத்திலேன் என்பது உண்மை! இதற்கு என் தந்தையார் இயற்றிய தவமே காரணமாகும்! தந்தையார் இழைத்த புண்ணியம் மக்களைச் சேராமற் போகுமா! என் மனமார்ந்த வணக்கம் உமக்கு உரித்தாகுக. ஆயினும், உம் தகுதிக்கேற்றவாறு உம்மை உபசரித்து உணவளிக்கும் பாக்கியத்தைச் சிறிதும் பெற்றிலேன்! தீவினையேன் என் செய்வேன்! இவ்விலைக்கறி தவிர வேறொன்றும் என்னிடம் இலது. இந்த அற்ப உணவென இகழாது ஏற்றுக்கொள்வீராக," என முக மலர்ந்து உண்மை அன்புடன் இலைக் கறியை அவ்வையாருக்கு இட்டனர்.

அன்புடன் இட்டது அற்பமேனும் உண்பாருக்கு மிக்க பயனளிக்குமன்றோ! ஆகவே அங்கவையார் அன்பு கூர்ந்து இட்ட அவ்விலைக் கறி அவ்வையாருக்குப் பெரிதும் சுவையளித்தது. அமுதெனை அதனை அவர் அன்புடன் உண்டனர். "அறிவிற் சிறந்த ஆரணங்கே, நீ அற்பமெனச் சொல்லி இட்ட இவ்வுணவு தேவாமிர்தத்தை ஒத்துள்ளது; உண்ண உண்ணத் தெவிட்டிலது; நல்ல சுவையுடையது; நெய்யை நிறையவிட்டுச் சமைத்துளது; இதனைப் பயனற்ற இலைக்கறியென நீ பொய்யுரைக்கின்றனை. பிறருக்கு எவ்வுயர் பொருளை ஈயினும் அற்பமென நினைத்தலே சான்றோர் மரபு! அக்கொள்கையை நீயும் கொண்டனைபோலும்! வள்ளல் பாரியின் மகளல்லவா நீ! தந்தையின் இயல்பு மகளைவிட்டு அகலுமோ!" என அவ்வையார் அங்கவையாரைப் புகழ்ந்தனர்; இக்கருத்தையமைத்துப் பின்வரும் பாடலையும் பாடினர்.

"வெய்தாய் நறுவிதாய் வேண்டளவுந் தின்பதாய்
நெய்தா னளாவி நிறையிட்டுப்—பொய்யே
யடகென்று சொல்லி யமுதத்தை யிட்டாள்
கடகஞ் செறியாதோ கை."

உடனே பாரியாரின் அகால மரணமும், பெண்ணணங்குகளின் பரிதாப நிலைமையும் அவரைப் பெரிதும் வருத்தின. ஆயினும், சிறிது தெளிந்து, "சென்றதை நினைப்பதில் பயனென்னை! இனி நடை பெறுவதையன்றோ நாம் யோசித்தல வேண்டும்! நாம் இப்போது புரிய வேண்டுவதோ இப்பெண்ணின் திருமணம்! இதை மிக்க ஆராய்ச்சியுடன் செய்தல் நலம். பூனையிடம் எலியைக் காட்டிக் கொடுத்தல் போன்று தகுதியற்ற ஆண்மக்களிடம் பெண்

களை ஒப்படைத்தல் ஒருபோதும் தக்கதன்று. இப்போது ஒன்று எனக்கு நினைவிற்கு வருகிறது. அரசனை தெய்வீகன் ஒருவன் உளன். அவன் ஆண்மையிலும், அறிவிலும், குணத்திலும் சிறந்தவன் ; பெரியோரிடம் மதிப்புள்ளவன். அவனுக்குத் தெய்வ பக்தியுமுண்டு. அவன் பெண்களைப் பேணுவதில் கருத்துள்ளவன். அவனுக்கோ கடவுளருளால் இன்னும் மணமாகவில்லை. அவனே இவளுக்குத் தக்க நாயகனாவான். ஆனால், இவளை அவனிடம் அழைத்துச் செல்லல் சிறிதும் சால்புடைத்தன்று. பெண் வீட்டார் பெண்ணை மணத்திற்கென ஆண் மக்கள் வீட்டிற்கு அழைத்துச் செல்லல் இழிவு. அங்ஙனம் செல்லினும், மூவேந்தருக்கும் பயந்து அவன் மறுக்கவும் கூடும். ஆகலின், மூவேந்தரையும் மணத்திற்கு அழைப்பதாகச் சொல்லி அவனை உடன்படச் செய்தலே தகுதி," எனத் தீர்மானித்து, அவ்வையார் தெய்வீகனிடம் சென்றனர்.

அவ்வையாரின் வரவு தெய்வீகனுக்கு இன்பமளித்தது. அவன் அவருக்கு நல்வரவு கூறித் தொழுதனன். அவன் வாய் பல உபசாரவார்த்தைகளை வழங்கியது. அச்சபையிலிருந்த ஒவ்வொருவரும் அவரவர்க்கேற்றவாறு அன்னையாருக்கு வணக்கத்தைப் புரிந்தனர். அச்சபை ஆதித்தனைக் கண்ட அம்புயமென மலர்ந்தது. பெரியாருடைய வரவு இடத்தையும் மக்களையும் தூய்மைப் படுத்தும் என்பது சான்றோர் நம்பிக்கை. "அன்னையார் அற்பனாகிய என்னை நோக்கி வந்தது யார் செய்த தவமோ! என் நாடு இயற்றிய பாக்கியமே பாக்கியம்! என் பெரியோர் புரிந்த புண்ணியமே புண்ணியம்!" என இயம்பி, அவன் அப்பெரியாரை வழிபட்டான்.

இவை யாவும் அவ்வையாருக்குப் பெரிதும் இன்பத்தையூட்டின. அவன் நலத்தை வினவி, மணத்தில் அவனுக்குள்ள விருப்பத்தையும் அவர் ஒருவாறு தெரிந்து கொண்டனர்; பின்பு பாரியாரின் மகளிரைப் பற்றி மேற்போக்காகச் சில விஷயங்களை அவனுக்கு எடுத்துரைத்தனர். பாரியாரின் மரணம் முதலியவற்றை முன்னரே நன்கு உணர்ந்த தெய்வீகன், அன்னையார் செப்பிய சில வார்த்தைகளினாலேயே உட்பொருளை நன்குணர்ந்தான். அங்கவையாரை மணப்பதில் அவன் வேட்கை செல்லினும் மூவேந்தருக்கு அவன் நெஞ்சம் பெரிதும் அஞ்சிற்று. "மூவேந்தர் பாரியாரைக் கொலை புரிந்தது அவர் மகளிர்க்காகவன்றோ! அச்சினம் இதற்குள் எங்ஙனம் அவர்களை விட்டு நீங்கியிருத்தல் கூடும்! அன்றியும், அவர்கள் விரும்பிய மகளிரில் ஒருத்தியை யாம் மணம்புரியின் பாரியைக் காட்டிலும் நம்மாட்டு மிக்க பகையையன்றோ பாராட்டுவார்கள்! அம்மூவேந்தர் பகையிலன்றோ நாம் எப்போதும் உழன்று திரிதல்வேண்டும்! நம் மனத்தை என்றும் துன்புறுத்தற்கு இஃது ஒரு கருவியாகும்! இம்முறையில் நம் வாழ்க்கை இன்புறுதல் யாங்ஙனம்! இத்துன்பத்திற்குக் காரணம் இம்மங்கையே என அடிக்கடி நம் நெஞ்சம் கருதுமன்றோ! அவ்வியல்பில் இப்பெண்ணின்மீது நமக்கு உண்மையன்பு எங்ஙனம் செல்லும்! உண்மையற்ற வாழ்க்கையும் ஒரு வாழ்க்கையாமா!

"இவற்றையூன்றி நோக்கின், இப்பெண்ணை மணக்க மறுத்தலே உத்தமம் எனத் தோன்றுகின்றது. அவ்வாறு செய்யின், இப்புலமைச் செல்வியரான அவ்வையாரின் சாபமொழி நம்மீது பாயுமே! அந்தோ! எதைத் தள்ளுவது,

ளைதக் கொள்ளுவது என எனக்குத்தோன்றிலதே! இப் போதைய என் நிலைமை இருதலைக் கொள்ளியெறும்பென ஆயிற்றே! இதற்கு யான் என் செய்வேன்! என்னவாயி னும் வில்லேருழவர் பகை கொளினும், சொல்லேருழவர் பகை கொள்ளுதல் ஒருகாலும் தகுதியுடையதன்று," எனச் சிந்தித்துக்கொண்டிருந்தனன். இச்சிந்தனையை அவன் முகம் அவ்வையாருக்குத் தெள்ளிதின் உணர்த்தி யது. மூவேந்தரையும் மணத்திற்கு அழைப்பதாக அவர் தெய்வீகனுக்கு வாக்களித்தனர். அஃது அவனைத் தெளி வித்தது. உடனே அவன் அவ்வையார் வாக்கிற்கு இசைந் தான். ஆகவே அங்கவையார்க்கும், தெய்வீகனுக்கும் மணம் நடப்பதாக ஏற்பாடாயிற்று.

வள்ளற்றன்மையிற் சிறந்த பாரியாரின் புதல்வியாராத லால் அம்மணத்தை மிக்க மேன்மையுடன் நடத்தவேண்டு மென்பது அவ்வையார் கருத்து. மண ஏற்பாடுகள் யாவும் சிறந்த முறையில் இயற்றப்பட்டன. மந்திரிமார் எல்லா அரசர்களுக்கும் ஓலை விடுத்தனர். அது வேந்தர் மூவருக் கும் சென்றிருப்பினும், அவ்வழைப்பிற்கு அவர்கள் மண மண்டபத்தை அணுகார் என்பது அன்னையாருக்குத்தெரி யும். தாமே சென்று அவர்களை அழைப்பதற்கோ, போதிய காலமில்லை. அவர் அவர்களிடம் சென்றுவிடின், அவண் நடைபெற வேண்டிய காரியங்கள் முறையே நடத்தல் அருமை. அதன்றியும் அச்சிறு விஷயத்திற்கு வேந்தரிடம் தாமே செல்லல் உசிதமன்று என்பது அவர் எண்ணம். அதற்கோர் உபாயத்தை அவர் மனம் தேர்ந்தெடுத்தது:

" சேரலர் கோனே, பாரிமகள் அங்கவையைத் தேவ ரும் மகிழ மணம்புரியத் தெய்வீகன் இசைந்தான். ஆத

லின், நீ திருக்கோவலூர் போந்து சிறப்புற மணத்தை நடத்தற்குப் பின் வாங்காதே !

"காவிரியினால் வளம் பெறும் சோழ நாடனே, நாளை பதினெட்டாம் நாள் திருக்கோவலூரில் அங்கவைக்குத் திருமணம் நடைபெறும். 'நாம் அங்குப் போகத்தகாது,' என நினைத்து நீ அவணிருந்தே ஏளனம் செய்யாதே ! விரைவாக இக்காரியத்திற்கு வருதலே உன்பெருமைக்குத் தகுதி !

"மதுரைமா நகர்ப் பாண்டியனே, அங்கவையின் மணத்திற்கு இன்னும் பதினெட்டு நாட்கள் உள்ளன. 'நாம் இதற்காகத் திருக்கோவலூர் செல்கையை மேற்கொள்ளத் தகாது,' என நினைத்துத் தயங்காதே ! வேண்டும் பரிசில்களுடன் இவண் வருதலே நலம்," என்னுங் கருத்தையமைத்து,

"கோவலர்கோன் சேரன் செழும்பூந் திருக்கோவ
லூரளவுந் தான்வருகவுட்காதே—பாரிமகள்
அங்கவையைக் கோள்ள வரசன் மனமியைந்தான்
சங்கியா தேவருக தான்."

"புகார்மன்னன் போன்னித் திருநாடன் சோழன்
தகாதேன்று தானங் கிருந்து—நகாதே
கடுகே வருக கடிக்கோவ லூர்க்கு
விடியல் பதினேட்டா நாள்."

"வையைத் துறைவன் மதுரா புரித்தேன்னன்
செய்யத் தகாதேன்று தேம்பாதே—தையற்கு
வேண்டுவன கோண்டு விடியல்பதி னேட்டாநாள்
ஈண்டு வருக விரைந்து."

என அவ்வையார் வேந்தர் மூவருக்கும் தனித்தனியே ஓலை போக்கினர்.

அம்மூவேந்தரும் அவ்வையாரின் தெய்வத் தன்மையையும் வாக்கின் நன்மையையும் நன்குணர்ந்தவர். அன்னையார்மாட்டு அவர்களுக்குப் பெருமதிப்புண்டு. அவர்கள் அரசச் செருக்கு அக்கவிச் செல்வியாரிடம் தலை காட்ட அஞ்சிற்று. அவ்வையாரின் கவி அவர்களுக்குப் பாரியாரிடம் இருந்த பகையைப் பறந்தோடச்செய்தது. புகழ்ச் சொற்களுக்கு மகிழாதார் உலகில் ஒருவருமிலர். நல்லிசைப்புலமை வாய்ந்த அவ்வையார், "நீங்கள் பரிசில்களுடன் வரவேண்டும்," எனக்கூறியுள்ள உரிமைச் சொற்களை அவர்களைப் பெரிதும் இன்பத்திலாழ்த்தின. புலவர் வாயிலிருந்து பிறக்கும் வசையோ, இசையோ தன் பயனை விளையாமற் போகாது என்பது அக்காலத்தவர் நம்பிக்கை. அங்ஙனமே அது நடந்தும் வந்தது. அதினும் அவ்வையாரைப்பற்றிச் செப்ப வேண்டுவதே இல்லை. இம்முறையில் இசையும் உரிமையும் பாராட்டி எழுதிய நம் தெய்வப்புலமை வாய்ந்த அன்னையாரின் கடிதம் அவர்களை எத்துணை ஆனந்தத்தில் ஆழ்த்தியிருக்கும் என்பதைச் செப்பவும் வேண்டுமோ !

இங்ஙனம் இன்ப வாரியில் ஆழ்ந்த வேந்தர் மூவரும் ஊன்றிச் சிந்தித்தனர். முதலில் அவர்களுக்கு ஒன்றுந் தோன்றிலது. அவ்வரவேற்பை மறுத்து மணத்திற்குப் போகாமலிருக்கவும் அவர்கள் மனம் இசைந்திலது. அன்றிச் செல்வதற்கும் அத்துணை திருப்தியுண்டாகவில்லை. ஆயினும், அவ்வையாருக்காகவேனும் அவண் செல்ல வேண்டுமென அவர்கள் நினைத்தார்கள். இவ்வோலையை

அவ்வையார் தவிர வேறு யாரேனும் விடுத்திருப்பின், உடனே வேந்தர் மூவரும் மறுத்திருப்பர். அவ்வையார் கல்வியறிவினும், பெருந்தன்மையினும் மிக்க மதிப்பு வைத்த அரசர் மூவரும் குறித்த நாளில் வரிசைகள் பல வற்றுடன் திருக்கோவலூர் அடைந்தனர்.

அவர்களைக் கண்டவுடன் அவ்வையார் முகமலர்ந்தது! மனம் குதுகுலித்தது! கண் பூரித்தது. தெய்வீகன் பய மொழிந்தான். மற்ற மன்னர்க்கு வியப்புண்டாயிற்று. அவ்வையாரின் திறமையைப்பற்றி எங்கும் பேச்சு நடந்தது. அங்கவையார் அதிர்ஷ்டமுடையவரெனப் பலர் நினைத்தனர். பொதுவாக மூவேந்தர் வரவு யாவருக்கும் மகிழ்வையும் வியப்பையும் விளைவித்தது.

அவ்வையார் மூவேந்தரையும் இனிய முகத்துடன் வரவேற்று, அவர்களோடு அளவளாவி, அவர்களுக்கென அமைத்திருந்த இருக்கைகளில் இருக்கச் செய்தனர். இன்னும் ஏதேனும் ஒருவழியால் அம்மணத்தை நிறுத்தி விட வேண்டுமென்பது வேந்தர் கருத்து. ஆதலின், அவர் மூவரும் அவ்வையாரை நோக்கி, "மணப்பந்தரைத் தாங்கி நிற்கும் இப்பனந்துண்டுகள் தழைத்துக் காய்த்துப் பழந் தருமாறு நீர் செய்யின், பாரி மகள் அங்கவையைத் தெய்வீகனுக்கு மணஞ்செய்ய இசைவோம்," என்றனர். அங் ஙனமே பனந்துண்டுகள் செழித்துப் பயன்தர அவ்வை யாரின் தூய திருவாய் ஒரு பாடலைப் பாடிற்று. அத்தெய் வீகப் பாடலினால் அப்பனந்துண்டங்கள் தழைத்து, குரும்பை விட்டு, நுங்கு முற்றி, அடியிற் கறுத்து, நுனி சிவந்து, வேந்தர் மூவருக்கும் தனித்தனியே மும்மூன்று பழங்களைத் தந்தன.

அவ்வையாரின் அத்தெய்வத்தன்மை அங்குள்ளார் யாவரையும் குதுகலிக்கச் செய்தது. வேந்தர் மூவரும் சொல்லொணு வியப்பிலாழ்ந்தனர். அவர்களுக்குப் பாரி மகளிரிடமிருந்த சினம் அறவே ஒழிந்தது. அன்பு தளிர்த்தது. மூவரும் அவ்வையாருடன் கலந்து அங்கவை யாரின் மணத்தைச் சிறப்புற நிறைவேற்றினர். அங்கவை யாரின் அறிவு நூற் கல்வியும், அடக்கமும், பெண்ணயமும் அவர்கள் நெஞ்சைக் கவர்ந்தன. ஆதலின் தங்கள் சொந்த மகளிர் மணமெனவே இன்றியமையாக் காரியங்கள் பல வற்றிலும் அம்மூவரும் கலந்துகொண்டனர். இன்னும் இயம்பின், அங்கவையார் கடி மணத்திற்கு மூவேந்தரே தலைவர் என நினைக்குமாறு இருந்தது.

நம் மூதாட்டியார் தெய்வத் தன்மையினுல் மணத் திற்கு வந்தோர் யாவரும் அறுசுவை உணவுகளை உண்டு மகிழ்ந்தனர். சிலருக்கு நல்லாடையும், பொன்னும் நிரம்பக் கிடைத்தன. வந்தவர் தத்தம் நாட்டிற்கேகினர்.

தேய்வீகனுக்கும், அங்கவையாருக்கும் சில அறிவுரை களை அவ்வையார் வாய் வழங்கியது. மணமக்களை அவர் கண்கள் இனிமையுடன் நோக்கின. நீதி வழாமல் அரசு நடாத்தவும், இல்லறத்தைப் புரியவும் தெய்வீகனுக்கும், அங்கவையாருக்கும் முறையே அறிவு புகட்டினர். பின்பு அவ்வையார் பிரியா விடை கொண்டு அவணிருந்து நீங்கினர். பாரி மகளிர் இருவரையும் அவ்வையார் தெய் வீகன் ஒருவனுக்கே மணம் செய்து தந்தனர் என்பது சிலர் கருத்து. ஆனுல், அவ்வையார் சேரனுக்கு வரைந்த கடிதத்தில், "பாரிமகள் அங்கவையைக்கொள்ள அரசன் மனமியைந்தான்," என்றும், மற்றிருவருக்கும் எழுதிய

தில் ஒருவர், இருவர் எனக்குறிப்பியாமலும் இருத்தலின், அங்கவையார் ஒருவரையே தெய்வீகனுக்குக் கொடுத்தார் எனக்கூற வேண்டியதாயிற்று. இதுவே அறிவுடையோர் ஒப்புக்கொள்ளும் முறையாகும்.

ஈண்டு நெடுகச் சிந்திக்க வேண்டுவன சில உள. கபிலர் இம்மகளிரைத் தம்முடன் அழைத்துக்கொண்டு பல இடங்களிலும் அலைந்தனர். இரு மன்னர் அவைகளுக்கும் அவர் கால்கள் நடந்தன. புலமை நிறைந்த புகழ் மலர்களால் அம்மன்னர்களை அவர் அலங்கரித்தனர்; பாரியின் வள்ளற்றன்மையையும், மகளிரின் கல்வி நலங்களையும் அவர் வாய் அவர்களுக்கு விரித்துரைத்தது. பெண் மக்களை ஆதரித்தல் ஆண் மக்களுக்கு இன்றியமையாத கடமையெனவும் அவர்களுக்குப் பகர்ந்தனர். கபிலரோ, பெரும்புலவர்; பெண்மக்களோ, அழகு வாய்ந்த அரசச் செல்விகள்; கவிமணிகள். ஆயினும், ஒன்றும் நற்பயனை அளித்திலது. இத்துணை சிறப்புகளும் பயனற்றதற்குக் காரணம் அவ்வரசர் மூவேந்தர்க்கும் அஞ்சினமையே யாகும்.

இச்சூக்குமத்தை அவ்வையார் நன்கு உணர்ந்தனர். இதற்குத்தக்க வழிதேடலே தகுதியென அவர் நுட்பமதி தீர்மானித்தது. ஆதலின் முதலில் அவர் தெய்வீக மன்னனுக்கு உட்கருத்துகளைத் தெளிய வுரைத்து அவனை இணங்கச் செய்தனர்; பின் மணத்தைப் பற்றி மன்னர் மூவருக்கும் ஓலை விடுத்தனர். அவ்வோலை அவர்கள் வருகைக்கு ஒரு வாகனமாயிருந்தது. பகை நோயைத் தீர்த்தற்கு அஃதொரு மருந்தாயிற்றெனக் கூறலாம். அஃது அவர்கள் மனத்தை ஊக்கி உடனே புறப்படுமாறு செய்தது. இதனாலேயே அக்காலத்தில் இருந்த கல்வி

அறிவிற் சிறந்த பெண் மணிகள் எத்தகைய நுட்ப மதி யைப் பெற்றிருந்தார்கள் என்பது புலனுகின்றது. அரச ரும் அவர்களுக்கேற்ற மதிப்பைக் கொடுத்து வந்தனர். பெரியோர் அவர்கள்மாட்டுக் காட்டிய அன்பே அவர் களுக்கு மேன்மேலும் ஊக்கத்தைப் பிறப்பித்தது.

இனி நற்புலமை வாய்ந்த சகோதரியர் இருவரையும் பற்றிச் சிறிது நோக்குவாம்: சகோதரியர் இருவரும் சுத்தவீரரும், கல்வி நலனை உணர்ந்தவரும், ஈகைக் குணத் தை இயல்பாக அமையப் பெற்றவருமான இரு வேறு அரசர்க்கு வாழ்க்கைப்பட்டனர் என உணர்ந் தோம். மக்களுக்கு இயற்கைக் குணங்கள் சில இருப்பி னும், பொதுவாக அவரவர்கள் வளர்ப்புக்கேற்றநல்லியல்பு களையோ, அன்றித் தீய இயல்புகளையோ பெற்றிருத்தல கண்கூடு. பெருந்தன்மையும,விரிந்த அறிவும் வாய்ந்த பெற் ரோரின் கூட்டுறவிற் பழகும் மக்கள் அங்ஙனமே ஆகின் றார்கள். ஆகவே, கற்பிற்கு அருங்கலமான தாயாரையும், ஈகைக்கிருப்பிடமாகுந் தந்தையாரையும் வாய்க்கப்பெற்ற நம் அரும்பெண் மகளிர் இருவரும் இல்லறத்தை நல்லற மாக்கி இனிதே வாழ்ந்திருந்தனர். சகோதரிகள் இரு வரும் அப்போதைக்கப்போது ஒருவரையொருவர் சந் தித்து இன்பமெய்தி வந்தனர். கவியரசியராகிய நம் கதைத் தலைவியர் இருவருக்கும் பொருட் செல்வமும், கல்விச் செல்வமும் ஒருங்கே அமைந்திருந்தன. கலை மகள் வதியுமிடத்தில் திருமகள் வதியாள் என்னும் வழக்கச் சொல்லை அம்மங்கையர் புறங்கண்டனர். கல்விக்கேற்ற பண்பும், பண்பிற்கேற்ற பழக்கமும், பழக்கத்திற்கேற்ற பெருந்தன்மையும் அவர்களிடம் அமைந்திருந்தன. அவர்

களை மணந்த அரசர் இருவரும் அவர்கள் செய்த தவமே இங்ஙனம் பெண்களாகத் திரண்டு வந்ததெனக் கருதினர். இப்புலமைச் செல்விகளால் அவர்கள் அடைந்த இன்பத்திற்கு அளவிலது. அவர்களின் ஒத்த பண்பும், ஒத்த அன்பும் யாவரையும் வியக்கச் செய்தன. அந்நாட்டினர் எந்த மணமக்களைப் பற்றிப் பேசும்போதும் இவர்களையே எடுத்துக்காட்டாகக் கூறுவர். இங்ஙனம் நற்கீர்த்தியையும் உண்மை இன்பத்தையும் பெற்று வாழ்ந்த நம் மங்கையர் அறிவறிந்த மக்கட் பேற்றையும் பெற்று, இல்லறத்தைப் பண்புறச் செய்தனர்.

புலமை வாய்ந்த பொற்கொடிகள் இருவரும், கல்வி அறிவைப் பெருக்கிக்கொள்ளுதற்பொருட்டு நாடோறும் பல நூல்களிலும் பழகி வந்தனர். குடும்ப வேலை ஒழிந்த நேரமெல்லாம் அவர்கள் கருத்துக் கல்வியிலேயே ஊன்றியிருந்தது. கபிலர் அவர்கள் நெஞ்சில் பதித்த கல்வி விதைகள், ஊக்க நீரினால் நாளுக்கு நாள் வளர்ந்துகொண்டே வந்தன. பொழுது போக்கிற்காகவும், விளையாட்டிற்காகவும் பயனற்ற நூல்களைப் படித்தல் என்ற எண்ணம் அவர்கள்மாட்டுணுகிலது. பெரும்பாலும் உயர்ந்த நூல்களையே வாசித்து அவற்றின் உட்பொருள்களை உணர்ந்தார்கள். இம்முறையில் அவர்கள் ஞானம் நாடோறும் வளர்பிறையென வளர்ந்துகொண்டே வந்தது. கற்றதை வாழ்க்கை முறையில் கொண்டு வருதலில் அவர்கள் கருத்து ஊன்றி நின்றது.

> **“ கற்க கசடறக் கற்பவை கற்றபின்**
> **நிற்க அதற்குத் தக.”** **—திருவள்ளுவர்**

என்னும் தெய்வ மொழி அவர்கள் மனத்தை விட்ட கன்றிலது. உயர் தத்துவங்களை நுணுகி ஆராய ஆராய, அவர்கள் ஒழுக்கங்களும் உயர்ந்துகொண்டே வந்தன. ஒழுக்கம் மாத்திரமா? விசால அறிவும், பெருந்தகைமையும் அவர்கள் மாட்டுக் குடிகொண்டன. குறுகிய எண்ணங் களும், பயனற்ற செய்கைகளும் அவர்களை விட்டுப் பறந் தன. நம் அருமை அன்னையர் பழைய துயரத்தை அறவே மறந்தனர். அறிவு நூற் கல்வி துக்கத்தைத் துடைக்கு மன்றோ! சில கால் நீதி முறையிலிருந்து வழுக்கும் தம் நாயகருக்கு அவர்கள் வாய்ச்சொல் ஊன்று கோலென உதவிற்று.

"இழுக்க லுடையுழி யூற்றுக்கோ லற்றே
ஒழுக்க முடையார்வாய்ச் சொல்." —திருவள்ளுவர்

குடும்பப் பொறுப்புகள் யாவும் அப்பெண் மணி களையே சார்ந்திருந்தன. நாயகர் செல்லும் வழியே அவர் கள் வழியாயிருந்தது. சமயம் நேர்ந்துழி நேர்மையற்ற தைப் பண்படுத்துதல் தகுதியேயன்றி மற்றப்போது முரண்படின் இல்லறத் தருமம் முட்டுப்படுமென்பதை அன்னையர் நன்குணர்ந்திருந்தனர்.

மக்களை வளர்ப்பதில் அம்மங்கையர் மேற்கொண்ட முயற்சி மிகப் பெரிது. மக்கள் சான்றோரென அறிவுடைய ரால் புகழப்படுதற்கு ஏற்ற வழிகளைத் தாங்களே செய்யத் தீர்மானித்தார்கள். அம்மக்களின் பழக்க வழக்கங்களி லும், கல்வியிலும் அப்பெருந்தகையினரே ஆசிரியராய் அமைந்தனர் எனல் மிகையாகாது. "நம்மக்களின் உண்டி, உடை, அறிவு, ஒழுக்கம் முதலியவற்றைச் சீர்மைப்

படுத்தும் பொறுப்பு நம் வசத்திலேயே இருக்கின்றது. இவைகள் கெடாமலிருப்பதற்கு நாமே உத்தரவாதிகள்,' என்பதை அவ்வனிதையர் நன்குணர்ந்திருந்தனர். ஈதல்லவா இல்லக்கிழத்திகளின் இன்றியமையாக் கடமை! இத்தன்மையில் அவர்கள் நாயகர்களுக்கு ஏற்ற நாயகிகளாகவும், மக்களுக்குகந்த மாதாக்களாகவும் திகழ்ந்திருப்பார்களென்பதற்கு ஐயம் யாது! அவர்களுக்குக் கடமைகளைவழுவாமலியற்றும் முறை இன்பத்தையும், அறிவு நூற்களின் ஆராய்ச்சி ஆநந்தத்தையும், கணவரின் ஒற்றுமைகளிப்பையும், மக்களின் சால்பு மகிழ்வையும் அளித்தன. இம்முறையில் கல்வியறிவிற் சிறந்த நம் அன்னையரின் வாழ்க்கை, தமக்கும் பிறர்க்கும் பயனுடையதாக நடைபெற்றது. அவ்வனிதையர் பல நன்மைகளையும் பெற்று இன்பம் பெருக வாழ்ந்து வந்தனர்.

நேரிசை வெண்பா

பண்பமைந்த பாரி மகளிரெனப் பாவையர்கள்
வண்மையுடன் கல்வி வளம்பெருக—நண்புடனே
செந்தமிழ்நாட் டின்கட் சிறந்து விளங்குதற்கென்
றிந்தநூற் செய்தே னிசைந்து.



THE LIBERTY PRESS, G. T., MADRAS.